# இணையத்தில் தமிழ் மின்னூல்கள்



க.பிரகாஷ் எம்.ஏ., எம்.பி:ல்.,

# இணையத்தில் தமி
# மின்னூல்கள்



**க.பிரகாஷ் எம்.ஏ., எம்.பி:ல்.,**

# பொருளடக்கம்

அறிமுகம் 4
முன்னுரை 6
இணையமும் தமிழும் அறிமுகம் 12
மின்னூல் - மின் நூலகம் 118
இணையத்தில் தமிழ் மின் இதழ்களும் கலைச்சொற்ளும் 198
முடிவுரை 256

எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல்லறிவு வேண்டும்
**..................**என்ற பாரதியின் அடியில் பிறந்து

நீ மனிதனாகப்
பிறந்திருக்கிறாய்
நீ வாழ்ந்து
மறைந்ததற்குப் பின்னால்
ஓர் அழியாத அடையாளம்
எதையாவது விட்டுச் செல்!
**................** என்ற விவேகானந்தரின் வாக்கினை புரிந்து

நான் அறிந்த
சில தகவல்களை
பல வெள்ளைக் காகிதத்தில்
எனது எழுத்தாணி முனையில்
வரைந்து
பலப் பேரின் பார்வைக்கு
உணவாக அளித்துள்ளேன்
இதனை கற்று
பலச் சுவைகளை அறிந்துக் கொள்ள
எனது வாழ்த்துக்கள்
நன்றி!
..................... க**.**பிரகாஷ்., எம்.ஏ, எம்.பில், (பிஎச்.டி)

கல் தோன்றி மண் தோன்றா காலத்துக்கு முந்தைய மொழி என போற்றப்படும் தமிழ் மொழியானது ஓலைச்சுவடு காலம் தொடங்கி பல்வேறு விதமான கால கட்டங்களை கடந்து இணையம் வரை வளர்ந்து நிற்கிறது. இந்த விஞ்ஞான யுகத்தில் ஆங்கில மொழிக்கு நிகராக தமிழ் மொழியும் கணினி மற்றும் இணையத்தில் வளர்ச்சியடைந்துவிட்டது.

காலந்தோறும் மரபு வழிச் சாதனங்களால் பேச்சு வழக்கில் செய்தி பரிமாற்றம் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. மனித சமூகத்திற்கு வழிகாட்டுவனவாக இசை, சொற்பொழிவுகள், கலைகள், பாடல்கள், கதைகள், பழமொழிகள், ஓவியங்கள், சிற்பங்கள், கல்வெட்டுக்கள் எல்லாம் மக்களின் வாழ்வு சிறப்புற அமைய அறிவுரை கூறி வழிகாட்டியாக அமைந்திருந்தன. இதில் இருந்து மாறுப்பட்டு புதிய தொழில்நுட்ப முறைகளால் தகவல் தொடர்பு வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமான இணையம், தகவல் தொடர்புச் சாதனங்கள், மின் வழிச் சாதனங்கள், மின்னணுச் சாதனங்கள், அச்சு வழிச் சாதனஙங்கள், மின் இதழ்கள் மற்றும் இது போன்ற புதுப்புது கோணங்களில் தகவல் தொடர்பினை ஏற்படுத்தி வருகின்றன. ஒலிப்பதிவு கருவி, ஒளிப்படக் கருவி, ஆகிய சாதனங்கள் மின்னணுச் சாதனங்களாகக் குறிப்பிடுகின்றனர். தொழில்நுட்பக் கருவிகள் களப்பணியைப் பொறுத்தவரை தகவல்களை நுட்பமாகவும் நுணுக்கமாகவும் பெற்றுத் தருவதிலும் தரவுகளை ஆவணப்படுத்துவதிலும் மின்னணுச் சாதனம் முக்கிய பங்கு வகிக்கிறது.

‘இணையத்தில் தமிழ் மின்னூல்கள்’ என்ற தலைப்பின் கீழ் இணையத்தின் தோற்றம் வளர்ச்சி, இணையமும் தமிழும், இணையம் பொருள், இணைய குறியீடு, இணைய முகவரி, வலைத்தளம், வலைத்தளம்

உருவாக்குதல், இணைய வரலாறு, இணையப் பயன்பாடு, இணையத் தமிழ் மாநாடுகள், மற்றும் மின்னூல், மின்னூல் உருவாக்கும் முறை, மின்னூல் வாசிக்கும் கருவிகள், மின்னூலை உருவாக்கும் போது ஏற்படும் சிக்கல் மற்றும் தீர்வுகாணுதல் மின்னூல் வரலாறு, மின்னூல் அமைப்பு, மின்னூல் பயன்பாடு, மின்நூலகம், மற்றும் மின் இதழ்களின் தோற்றம் வளர்ச்சி, மின் இதழ்களின் வகைப்பாடு என அடிப்படையைக் கொண்டு ஆராயப்படுகிறது..

'இணையத்தில் தமிழ் மின்னூல்கள்' என்ற தலைப்பில் மின்னூலைப் பற்றிய முழுமையான முறையான அறிவை தமிழ்ச்சமூகத்திற்கு வழங்குதல் மற்றும் இணையப் பயன்பாட்டின் அடிப்படையில் மின்னூல் அமைப்பு, மின்னூல் உருவாக்கும் முறை, மின்னூல் வாசிக்க உதவும் வன்பொருள்கள், மற்றும் மென்பொருள்கள், மின்னூல் பயன்பாடு, மின் நூலக அமைப்பு, மின் இதழ் தோற்றம் வளர்ச்சி, தமிழ் இணைய மாநாடு அறிந்து கொள்வதற்கு பயன்படுகின்றது.

உலக அளவில் உடனுக்குடன் செய்திகளை பரிமாறிக் கொள்ளும் இணையத்திற்கு ஈடுகொடுத்துள்ள தமிழ்மொழி. வருங்காலத்தில் இன்னும் விரைவாக வளரும் என்று நோக்கத்தோடு இந்நூலினை உருவாக்கியுள்ளேன்.

க.பிரகாஷ், எம்.ஏ, எம்.பிஃல்,
தமிழ்த்துறை
தொழில் நுட்பக் கள ஆய்வுப் பணியாளர்
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர் – 46
kprakashkpd@gmail.com
kprakashtamil.blogspot.com
+91 - 9944062607
+91 - 9698525367

இணையம்

இணையம் இன்று உலக முழுவதிலும் பலகோடி மக்களின் பயன்பாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் புதுக்கண்டுப்பிடிப்பு என்று கூறலாம். மிக பழைய தகவல்களையும், இன்று புதிதாகத் தோன்றக் கூடிய பல புதிய தகவல்களையும் பெற இணையம் உதவி வருகின்றது. தகவல்களை அனுப்புவதற்கும், தகவல்களை பெறுவதற்கும், கருத்துகளைத் தெரிவிக்கவும், வாங்கவும், விற்கவும், கற்பணை செய்து பார்க்க முடியாத அளவிற்கு இணையத்தில் தகவல்கள் குவிந்து கிடக்கின்றன.

இணையத்தில் படைப்பாளர்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறு தகவல்களைச் சேமித்து வைத்துள்ளார்கள். அவை இலக்கியம், இலக்கணம், திரைப்படம், வரலாறு, புவியியல், வானியல், அறிவியல், கணிதம், சோதிடம், பக்தி, பொதுஅறிவு, மருத்துவம், சித்தம், யோகம், சமையல்குறிப்பு, ஓவியக்கலை, விளையாட்டு போன்ற எண்ணற்ற தலைப்புகளில் தகவல்களாகவும், நூல்களாகவும் வெளியிட்டுள்ளனர்.

உலகெங்கும் சிதறிக் கிடைக்கும் தகவல்களை இணையத்தில் இணைத்துவிட்டால் யாரும் எந்த நேரமும் சென்று அத்தகவல்களைப் பெற முடியும். முற்காலத்தில் ஒன்றைப் பற்றி அல்லது ஒருவரைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டுமாயின் நூலகங்களுக்குச் சென்று அலைய வேண்டிய சூழல் இருந்தன. இப்பொழுது தேவையான ஒன்றையோ அல்லது கருத்தையோ, ஒருவர் பற்றிய தகவல்களையோ, தெறிந்து கொள்ள நாம் அன்றாடம் பயன்படுத்திவரும் கையடக்க கருவியான அலைபேசி மற்றும் திறன்பேசி, நுண்ணரிபேசி, வில்லை, கணினிபோன்றவற்றில் இணைய வசதிபெற்று கருத்துக்களைத் தெரிந்து கொள்ளலாம்.

இணையத்தில் செய்திகள் படிக்கலாம், படங்கள் பார்க்கலாம், பாடல்கள் கேட்கலாம், தகவல் பரிமாற்றலாம், பொழுதுபோக்கலாம், அறிவைப்

பெருக்கலாம். இது போன்ற பல தகவல்களைப் பெற்று மனநிறைவு பெறசெய்வது இணையமாகும். அந்த அளவிற்கு இணையம் இன்று வளர்ந்து கொண்டே வருகின்றது.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்"**1 (** குறள் **- 666)**

என்ற குறளில் எண்ணியவர் எண்ணியபடியே செயல் ஆற்றுவதில் உறுதியுடையவராக இருக்கப்பெற்றால் அவர் எண்ணியவற்றை எண்ணியவாறே அடைவார் என்று திருவள்ளுவர் குறிப்பிடுவது போல் நீங்கள் எதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அதனை இணையத்தில் சென்று ஒரு சில நொடிகளில் தேடித் தெரிந்து கொள்ளலாம்.

இணைய சொற்பொருள், இணைய வரலாறு, வலைப் பின்னல், முதல் இணைய தளம், தமிழில் முதல் இணையதளம், இணைய வசதி வழங்குவோர், இணைப்பு பெற இணைய குறியீடுகள், இணைய முகவரி, உலக இணைய வரலாறு, இணையத்தின் பயன்கள், இணையத்தில் தேடுதல் வசதிகள், இணைய தேடுபொறி விளையும் நன்மைகள், இணைய வழிக் கலந்துரையாடல் இவை அனைத்தும் இணையத்தின் பயன்கள் என்று இணையம் பற்றிய கருத்துகளை விளக்குவதற்கு உள்ளடக்கமாக வரையறுக்கப் பட்டுள்ளன.

இணையம் சொற்பொருள்

உலகம் முழுவதும் உள்ள அனைத்துக் கணினிகளையும் ஒரே மின்னனு வலையில் சங்கிலிப்பிணைப்பு செய்யப் பெற்று ஒன்றாக்கப்பட்டது தான் இணையம். உலகெங்கும் கணிப்பொறியில் உள்ள செய்திகளின் இணைப்பே இணையம் ஆகும். உலகளாவிய வலை இதனை ஆங்கிலத்தில் **world wide web** என்பர். இதனை சுருக்கமாக **www** என்றும் **w3 The web** என்றும் குறிப்பிடுவதுண்டு.

இணைய வரலாறு

இன்றைய உலகம் இணைய வழிகாட்டுதலின்படி பீடுநடை போடுகிறது எனில் அது மிகையன்று. 1950 ஆம் ஆண்டிற்கு அண்மையில் தொடர்பியல் ஆய்வாளர்கள் கணினி மற்றும் பல்வேறு தொலைத் தொடர்பு வலையமைப்பின் பயன்கள் பெரிதுவான தொடர்பு மற்றும் தகவல் பரிமாற்றம் கொள்ள ஆவன செய்ய வேண்டும் என எண்ணினார்.

இதன் விளைவாக மையக் கட்டுப்பாடற்ற வலையமைப்புகள் வரிசைப்படுத்தும் முறைகள் மற்றும் தரவுப்பொது நிலைமாற்றம் போன்ற துறைகளில் ஆய்வு செய்யத் துவங்கினர்.

இணையத் தந்தையான ஜே.சி.ஆர்.லிக்லைடர் என்பவரை அழைக்கின்றனர்.

அரிய கண்டுபிடிப்புக்கு வித்திட்டவர்கள் பிரிட்டானிய நாட்டு அறிஞர்களான சார்லஸ் காவ் மற்றும் ஜார்ஜ்ஸ் ஹாக்மேன் ஆகியோர் ஆவார். 1996 இல் ஃபைபர் நூலிழையின் உதவியால் தகவல்களை ஒளிப் பிம்பங்களாக மாற்றி நெடுந்தொலைவு அனுப்ப முடியும் என்று கண்டுபிடித்தனர்.

1980 இல் பிரான்ஸ் நாட்டில் மினிடெல் என்பவர் தொலைபேசி கம்பி வழியிலான தகவலறியும் சேவையைத் துவக்கினார்.1992 நவம்பர் மாதம் டெல்ஃபி என்ற நிறுவனம் பெரிய அளவிலான தகவல் சேவையைத் தொடங்கியது.

1993 செப்டம்பர் 15 இல் மிகப்பெரும் அளவிலான தேசியத் தகவல் பரவலுக்கான திட்டம் ஒன்றை அமெரிக்க அரசு வரைவு செய்தது.

1993 இல் இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தின் **(National Centre For Super Computing)** என்ற மையத்தைச் சார்ந்த மாணவர்கள் பல வசதிகள் கொண்ட இணையத் தேடலுக்கான மென்பொருள் திரையைக் கண்டறிந்தனர். இது மொசைக் என்றழைக்கப்பட்டது. இதனை மார்க்

ஆண்டர்சன் மொசைக் என்பவர் கண்டறிந்தார்.

வலைப்பின்னல் மையம்

வலைப்பின்னல் என்பது மீள்கருவி மையம் என்று குறிப்பிடுவர். பல சுருளிணைகள் ஒளியிழை, ஈத்தர்நெட் கருவிகளை ஒன்றாக இணைத்து அவற்றை ஒற்றை வலைப்பின்னல் கூறாகச் செயல்பட உதவும் கருவியாகும்.

1994 இல் **www** என்ற வலைப்பின்னலாக அமைந்த அமைப்பு உலகின் பல்வேறு பகுதிகளை இணைக்கும் கருவியாக உருமாற்றம் பெற்றது. இதன் மூலம் தகவல்களை மட்டும்மல்லாத படங்களையும் பார்க்க முடிந்தது. சுவிட்சர்லாந்து நாட்டில் உள்ள செர்ன் என்னும் அணுத்துகள் இயற்பியல் நிறுவனம் உலகு தழுவிய விரிவு வலைமுறையைக் கொண்டு வந்தது.

1995 இல் கொரிய நாட்டில் பிறந்த பின் அமெரிக்கா நாட்டில் குடியுரிமை பெற்ற நாம் ஜீன் பெய்க **(Nam Jun Paik)** என்பவர் **(Yber Town)** என்ற ஒன்றை நிறுவி அதன் மூலம் பல்லாயிரக் கணக்கான மக்களை இணைத்தார்.

வலைப்பின்னல் பயன்

வலைப்பின்னல் இணைப்பு ஒன்றனுள் ஒரு மரபுப் பகுப்பாய்வுக் கருவியை நுழைப்பதற்கு வலைப்பின்னல் குழாய் அல்லது துளைவாய் உருக்காட்டலுக்கு மாற்றாக ஒரு மையம் செயல்படுகிறது.

கணினித் தொகுதிகள் சிலவற்றில் உறுப்புக் கணினி ஒவ்வொன்றும் தொகுதிக்குள் வரும் போக்குவரத்து அனைத்தையும் உள்வாங்கிக் கொள்ளத்தக்கதாக இருக்க வேண்டும். மையம் இவ்வேலையை இயல்பாகச் செய்யும் மாற்றுக் குமிழைப் பயன்படுத்த வேண்டுமானால் மையமானது சிறப்பு ஒழுங்கமைப்பு செய்யப்பட வேண்டும்.

பயனீட்டாளர்கள் இணைப்புகளை ஏற்படுத்த அவர்கள் அணுகும் வகையில் மாற்று குமிழ்கள் இருந்தால் ஒரு கூட்டமான அறையில் உள்ள அனுபவமும் கவனமும் இல்லாத ஒரு பயனர் இரண்டு துளைவாய்களை இணைத்து ஒரு கணினியை ஏற்படுத்திவிடக்கூடும். இதனால் வலைப்பின்னல் செயலிழக்கக் கூடிய அபாயம் உள்ளது. மையத்தை பயன்படுத்துவதன் மூலம் இதைத் தவிர்க்கலாம். ஏனெனில் மையத்தில் உள்ள ஒரு கணினி மையத்தின் பிற பயனர்களைத் துண்டிக்காது. அவற்றை சமாளிக்கும் மாற்றுக் குமிழ்களை வாங்குவதன் மூலமும் இதைத் தடுக்கலாம்.

வலைப்பதிவு உருவாக்கும் முறை

தமிழில் வலைப்பூ அல்லது வலைப்பதிவு என்று அழைக்கலாம். இந்த வலைப்பதிவின் மூலமாக உங்களுடைய கருத்துக்களை அனுபவங்களை உலக மக்களுடன் பகிர்ந்து கொள்ளலாம். அல்லது நீங்கள் ரசித்ததை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம். இணையத்தின் மூலமாகப் பணம் சம்பாதிப்பதற்காகவும் வலைப்பதிவைத் தொடங்கலாம்.

பணம் சம்பாதிப்பதற்காக வலைப்பதிவைத் தொடங்க நினைத்தால் அந்த வலைப்பதிவை ஆங்கிலத்தில் தொடங்குங்கள். இலவசமாக வலைப்பதிவு ஆங்கிலத்தில் தொடங்குவதற்கு பல இணையத் தளங்கள் உள்ளன. அவற்றில் பிரபலமானவை பிளாகர் **(Blogger)** மற்றும் வோர்ட்பிரஸ் **( Word Press)** எனும் இணையத் தளங்கள் உள்ளன. **(Blogger)**தளம் கூகிள் நிறுவனத்திற்குச் சொந்தமான தளம் ஆகும்.

உங்களுக்கு மின்னஞ்சல் முகவரி கூகிள் கணக்கு இருந்தால் இதன் மூலம் **(Blogger)**தளத்தைப் பயன்படுத்தலாம். அல்லது புதிதாக ஒரு கூகிள் கணக்கைத் தொடங்கினாலே நீங்கள் கொடுக்கும் பெயருடன் **(Blogspot)** எனும் இணைப்புச் சேர்ந்து வரும்.

முதலில் **www.blogger.com** என்ற முகவரிக்குச் செல்லுங்கள் அதற்கு பின் உங்கள் வலைப்பூ உருவாக்க முடியும்.

முதல் இணைய தளங்கள்

"உலகின் முதல் இணையதளம் அர்பாநெட்" "**Advanced Research Project Agency Network**" ஆகும். கலிஃபோர்னியா மற்றும் ஃவுடா மாகாணங்களில் இருந்த கணினிகளை இணைத்து அமெரிக்க நாட்டின் பாதுகாப்புத் துறையில் எதிரிகளுக்குத் தெரியாமல் இராணுவ வீரர்கள் செய்திகளைப் பகிர்ந்து கொள்ள குறியீடுகளைப் பயன்படுத்தினர்"2 இதனைத் தொடர்ந்து 1972 இல் ஐம்பது பல்கலைக்கழகங்கள் இணையக்கப்பட்டன. 1983 இல் பல்வேறு நாடுகளின் 562 கணிப்பொறிக் கட்டமைப்புகள் இதில் இடம் பெற்றன.

உலகிலேயே அதிகமான எண்ணிக்கையில் பயனாளர் கொண்டுள்ள இணையதளங்கள், அமேசான், வேட்பிரஸ், ஆப்பிள், முகப்புத்தகம், கூகிள், யூடெப், யாகூ, போன்ற இணைய தளங்கள் சிறப்பு பெற்று இருக்கின்றன.

அமேசான்

அமேசான் இணைய தளமானது எலக்டரானிக் சாதனங்கள், உடைகள் விளையாட்டு சாதனங்கள், மற்றும் உணவு கூட இங்கு விற்பனை செய்யப்படுகிறது. இதன் தனிநபர் வாடிக்கையாளர் எண்ணிக்கை 16 கோடியே 30 லட்சம் முதன் முதலில் தொடங்கிய போது பொருட்கள் பெற்று பேக் செய்து அனுப்பும் பணியைத்தான் மேற்கண்டதாக இருந்தது. தற்போது இதன் இமாலய வளர்ச்சி இணைய வர்த்தகத்தின் சிறப்பினைக் காட்டுவதாக அமைந்துள்ளது. இதனை முதல் இணையதளம் என்று குறிப்பிடுகின்றனர்.

கூகிள்

78 கோடியே 28 லட்சம் பேரை தன் வாடிக்கையாளாகக் கொண்ட இந்த தேடுதல் தளம் ஆகும். இன்று உலகின் முதல் இடமாக இருந்து இரண்டாவது இடத்திற்கு மாறிவந்துள்ளது. மின்னஞ்சல் கூகிள் பாக்ஸ், கூகிள் மெயில் என இணையத்தில் இயங்கும் அனைவரையும் ஒரு வகையில் இழுத்துப் போட்டு வைத்துக் கொள்கிறது.

யூ டியுப்

பயனாளர்கள் உருவாக்கிய வீடியோ காட்சிகளைப் பகிர்ந்து கொள்ள பார்த்து ரசிக்க இது ஓர் அருமையான தளமாகப் பல ஆண்டுகளாக இயங்கி வருகிறது. 2006 இல் கூகிள் நிறுவனம் தனதாக்கி கொண்டு தொடர்ந்து பல வசதிகளை அளித்து வருகிறது. தனி நபர் சந்தாதாரர்கள் எண்ணிக்கை 72 கோடி 19 லட்சம் ஆகும்.

யாகூ

இணைய பல்நோக்கு தளங்களில் முன்னோடியானது இந்த தளம் தேடல் சாதனமாகவும் இணைய போர்டல் தளமாகவும் செயல்படுகிறது. வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை 46 கோடியே 99 லட்சம் ஆகும்.

முகப்புத்தகம்

முகப்புத்தகம் உலகிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் தனிநபர் வாடிக்கையாளர்களைக் கொண்டதாக இயங்கி வருகிறது. இந்தச் சமூக இணைய தளத்தின் மூலம் நண்பர்கள் அனைவரையும் உடனுக்குடன் தொடர்பு கொண்டு தகவல்களைப் பரிமாறிக் கொள்ளலாம். முதன் முதலில் **Harvard university** ஹர்வேர்ட் பல்கலைக்கழக மாணவர்களுக்கு மட்டும் எனத் தொடங்கப்பட்ட இந்தச் சமூகவலைதளம் இன்று உலகின் அனைத்து நாடுகளிலிருந்தும் நண்பர்களைக் கொண்ட தளமாக இயங்கிவருகிறது.

ஆப்பிள்

ஆப்பிள் சாதனங்கள் மற்றும் அவற்றிற்கான மென்பொருள் நிகழ்ச்சிக்களுக்கான தனி தளம். இவற்றைப் பயன்படுத்தும் வாடிக்கையாளர்கள் தங்கள் சந்தேகங்களைப் போக்குவதற்கான தகவல்களைத் தரும் தளமாகவும் விளங்குகிறது.. இதன் வாடிக்கையாளர் எண்ணிக்கை 17 கோடியே 17 லட்சம் ஆகும்.

பதிவர்

மிகச் சிறிய நிறுவனமாகத் தொடங்கப்பட்ட இந்நிறுவனம் இணைய தளங்கள் சரிவைச் சிந்தித்த போது தள்ளாடியது. பின்னர் 2002 கூகிள் இதனை மேற்கொண்டு தற்போது உயரக்கொண்டு வந்துள்ளது. வலைமனை அமைப்பாளர்கள் அதிகமாக நாடும் தளம் இதுதான். 22 கோடியே 99 லட்சம் வாடிக்கையாளர்கள் இத்தளத்தில் இணைந்துள்ளனர்.

தமிழில் முதல் இணையதளம்

தமிழ் மொழியின் பயன்பாட்டை இணையதளத்தில் கொண்டு சேர்க்கின்ற முயற்சியில் முதலிடத்தில் இருப்பவர்கள் சிங்கப்பூர் மற்றும் இலங்கைத் தமிழர்கள் ஆவார். தமிழ் இணையதளத்தின் தந்தை என்று போற்றப்படுபவர் சிங்கப்பூர் பேராசிரியர் நா.கோவிந்தசாமி ஆவார். இவர் சீனாவிற்குச் சென்ற பொழுது அவரது நண்பரிடம் தமிழின் பெருமைகளை எடுத்துக் கூறியுள்ளார். இதனைக் கேட்டு வியந்த அவரது நண்பர் எங்களின் சீன மொழியைப் போலப் பெருமை வாய்ந்த மொழி உங்களின் தமிழ் மொழி. ஆகவே எங்கள் மொழியைப் போலவே உங்கள் மொழியும் இணையத்தில் ஏற்றலாம் என்று கூறினார். அதன் விளைவாகத் தமிழை இணையத்தில் ஏற்றும் முயற்சியில் பேரா.நா. கோவிந்தசாமி ஈடுபட்டதாக அறியமுடிகிறது.

"1995 அக்டோபரில் சிங்கப்பூர் அதிபர் திரு. ஓங்டாங்சாங் தொடங்கி வைத்த **Journey words home and nation anthology of singapore** 1984 – 1995 என்கிற நான்கு தேசிய மொழிக் கவிதைகளுக்கான வலையகத்தில்தான் முதன் முதலில் தமிழ் இணையம் பரவ செய்தது."3 இதைச்சாதித்த **Internet Research and Development Unit** குழுவில் கோவிந்தசாமியும் அவரோடு இணைந்து பணியாற்றிய வல்லுநர்கள் டாக்டர் டான்டின் வி. லியோஸ் கோக்யாங் ஆகிய இரு சீனர்களும் முதல் தமிழ்ப் பக்கத்தை வலையேற்றியவர்கள். இவர்களுக்குத் தமிழ் கூறும் நல்லுலகம் என்றென்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளது.

இணையத்தை வழிநடத்துவோர்

இணையத்தை தனி மனிதனோ அல்லது குழுவோ கட்டுப்படுத்துவதில்லை எனினும் இணையத்தினை வழிநடத்த இணையக் கழகத்தைக் கணினி வல்லுநர்கள் இலாப நோக்கமின்றி நடத்தி வருகின்றனர். அவற்றுள் **IAB, IETF** ஆகிய இரண்டு கழகங்கள் குறிப்பிடத்தக்கன.

- **IAB - Internet Architecture Board**
- **IETF - Internet Engineering Test Force**

**IAB** என்பது கணினிகளை இணையத்தில் இணைப்பதற்கான வரையறு ஆகும். இணையத்தில் இணைந்துள்ள கணினிகளுக்கு முகவரிகளை இது வழங்குகிறது. மேலும் தேவைப்படுகின்ற நேரங்களின் தேவைகேற்ப வரையறுகளை மாற்றி அமைக்கும் பணியையும் இக்கழகம் தொடர்ந்து செய்கிறது.

**IETF** என்பது கணினியின் தொழில் நூட்ப வளர்ச்சி குறித்தும் அதனால் இணையத்தில் ஏற்படுத்த வேண்டிய மாறுதல்கள் குறித்து முடிவு செய்கிறது.

இணைய விதிமுறைகளைக் கண்காணிப்பதற்காக **The Internet Soicety Ouerseas for the Development of the Internet** என்ற அமைப்பும் இணைய தளங்களை மேற்பார்வையிடுவதற்காக **World Wide Web Consortium** என்ற அமைப்பு செயல்பட்டு வருகின்றது.

## இணைய வசதி வழங்குவோர்

இணைய வசதிகளை வழங்கும் நிறுவனங்களிடமிருந்து கட்டணம் செலுத்தி இணைய இணைப்புப் பெற்றுக் கொள்ளலாம். இத்தகைய சேவையை வழங்கும் நிறுவனங்கள் ஆங்கிலத்தில் **Service provider** என்று அழைக்கப்படும். தமிழில் சேவை வழங்குநர் என்று கருதப்படுவதுண்டு.

அமெரிக்காவில் **GTR, MCI, SEINT,UUNET,AOL,** ஆகிய நிறுவனங்கள் இணைய சேவையை வழங்குகின்றன. இந்தியாவில் **VSNL, BSNL, DISHNET, STFY, AIRTEL, RELIANCE, TATA INDICOM** முதலிய பல நிறுவனங்கள் இச்சேவையை அளிக்கின்றன. நாம் இதனைத் தான் இணைய சேவை வசதி என்று குறிப்பிடுவதுண்டு.

இணைய இணைப்பு பெற தேவையானவை

இணைய இணைப்பு பெறுவதற்குக் கணினி தொலைபேசி இணைப்பு **(Modam)** பாங்கு ஆகிய மூன்று இருந்தால் போதும். இணைய வசதி பெற்றிடலாம். இணைய வசதி வழங்கும் நிறுவனங்களிடம் கட்டணம் செலுத்தி இணைப்பை பெற்றுக் கொள்ளலாம். நாம் பயன்படுத்தும் அளவிற்கேற்ப உரிய தொகையானது முன் தொகையாகவோ பின் தொகையாகவோ செலுத்தப்பட வேண்டும்.

இணைய முகவரி

ஒவ்வொருவருக்கும் ஒரு பெயர் மற்றும் முகவரி இருப்பது போல் ஒவ்வொரு இணையதளத்திற்கும் ஒரு பெயர் மற்றும் முகவரி இருக்கிறது. இணைய முகவரி என்று கூறுவர். **http;//www.prakashtamil.blogspot.com** இம் முகவரியில் நான்கு பகுதிகள் உள்ளன.

**http - Hyper text transport protocol** என்பதன் சுருக்கமாகும்.

(மீயுரைப் பரிமாற்று நெறிமுறை)

**www - World wide wib** என்பதன் சுருக்கமாகும்.

(வையக வரி வலை)

**prakashtamil.blogspot** - குறிப்பிட்ட ஓர் இணையதளத்திற்கு வழங்கப்பட்டும் பெயர் ஆகும்.

**com - Commerce** என்பது சுருக்கமாகும்.

இது இணையதளத்தின் தன்மையைக் குறிப்பிடுவதாகும்.

"சுவிட்சர்லாந்து நாட்டில் 'செர்ன்' என்னும் அணுத்துகள் ஆராய்ச்சி நிலையம் உள்ளது. அங்கு டிம் பெர்னர்லீ என்ற இயற்பியல் வல்லுநர் பணியாற்றினார். இவர் 1989 இல் உலகளாவிய வலைப்பின்னலுக்கு **www world wide web** பெயரிட்டார்"4

டிம்பெர்னர் லீ இணையத்துக்கு அடிப்படையான மூன்று கருத்துக்களை கண்டுபிடித்தார்.

அவை

**http**

**url**

**html**

**http – Hyper text transter protocol** என்பதன் சுருக்கமே ஆகும். (மீவுரைப் பரிமாற்ற நெறிமுறை) வையக வலையில் தகவலைப் பெறுவதற்கான விதிமுறை புரோட்டோக்கால் எனப்படும். தொடக்கம் செய்தி படம் எழுத்து முடிவு இவையென இந்த விதிமுறைகள் மூலம் முன்பே தீர்மானித்தார்.

**URL - Uniform Resource Locator** என்பதன் சுருக்கம் ஆகும். சீரான வள இடங்காட்டி இணையத்தில் உள்ள தகவலின் இருப்பிடம் காட்டும் முகவரியே இதுவாகும். இந்த முகவரியைப் பயன்படுத்தியே உலாவிகள் இணைய வலங்களைக் கண்டறிகின்றன. **http;//www.Google.com** என்பது சீரான வள இடங்காட்டிகளுள் ஒன்று ஆகும்.

**HTML – Hyper Text Markup Language** என்பதன் சுருக்கம்

ஆகும். மீயுரைக் குறிப்பு மொழி இணையத்தில் ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்குத் தாவிச் செல்ல குறிப்புகள் எழுதவேண்டும். இந்த குறிப்புகள் எழுதும் மொழியே மீயுரைக் குறிப்பு மொழி ஆகும். ஆவணத்தில் இரு பகுதிகள் உண்டு.

அவை!

தலை

உடல்

தலைப்பகுதியில் ஆவணத்தின் தலைப்பும், உடல் பகுதியில் ஆவணமும் இருக்கும். 1991 மே மாதம் இந்த வையக விரிவு வலை அறிமுகமானது. காலாகாலத்திற்குச் சேமிக்க முடிவதால் இப்பொழுது வலையே கதி என்ற சூழல் ஏற்பட்டுவிட்டது.

இணைய முகவரியும் இணையச் செயல்பாடும்

ஒவ்வொரு தொலைபேசி இணைப்பிற்கும் ஓர் எண் இருப்பதுபோல இணையத்தில் இணைந்துள்ள ஒவ்வொரு கணிப்பொறிக்கும் ஓர் அடையாள எண் உண்டு. இந்த எண்ணில் நான்கு பகுதிகள் இருக்கும். சான்றுக்கு 456-12-25-78 என்பது ஒரு முகவர் கணிப்பொறியின் அடையாள எண் ஆகும். இந்த அடையாள எண்களை நினைவில் வைத்திருப்பது கடினம். எண்ணிற்குப் பதிலாக எழுத்திலான பெயரைப் பயன்படுத்துகிறோம்.

நமக்குத் தேவையான முகவரியை உள்ளிட்டால் தேடும் பொறி அந்தமுகவரியைக் கண்டுபிடித்து நம் கணிப்பொறித் திரையில் காட்டும். இதற்கு யாகு, கூகிள், அல்டாவிஸ்டா எனப் பல தேடும்பொறிகள் உள்ளன.

இணையச் செயல்பாடு

இணைய இணைப்பை பெறத் தேவையானவை சில கருவிகள் உள்ளன. அவை

கணிப்பொறி **Computer**

தொலைபேசி **Tele communication**

மாற்றி **Modem**

தொடர்பு மென்பொருள் **Communication Software**

இணையச் சேவை வழங்குபவர் **Internet Service Provide**

இது போன்ற கருவிகளின் மூலம் இணைய வசதிகள் பெற முடிகின்றன. தொலைபேசி வழியே இணையத்தைப் பயன் படுத்துவதில் தொடர்பு மென்பொருள்கள் பெரிதும் உதவுகின்றன. இப்பொழுது ஒளியிழைத் தடங்கள் வழியே இணைய இணைப்பை எளிதிலும் விரைவாகவும் பெறமுடிகிறது.

கணிப்பொறியில் இணைய சேவை பெறுவதற்கு முன்பே இணையம் செயல்படுவதற்காண மென்பொருள்களை பொருத்தி இருக்க வேண்டும். **landline** தொலை நிகர வசதியாகவும், மாற்றி போன்ற முறையிலும் இணைய சேவை கணிப் பொறியில் பெறமுடியும்.

இணைய குறியீடுகள்

இணைய குறியீடு என்பது ஒவ்வொரு நிர்வாகத்திற்கும் அரசாங்கத்திற்கும் வெளிநாட்டிற்கும், கல்வி, பல்கலைக்கழகம், இராணுவம் போன்ற பல நிறுவணங்களின் விரிவான பெயர்களை தான் இப்பொழுது இணையத்தில் சுருக்கமாக வடிவமைத்து குறிப்பிட்டுள்ளனர்.

அவை

- கல்வி **edu**
- பல்கலைக்கழகம் **univ**
- அரசு சாராநிறுவனம் **org**
- இராணுவம் **mail**
- வலைப்பராமரிப்பு **net**
- அரசாங்கம் **gor**
- தமிழ்நாடு **tn**
- இந்தியா **in**
- சிங்கப்பூர் **sg**
- கனடா **ca**
- இங்கிலாந்து **uk**

ஒருவருக்கு எழுதப்படுகின்ற கடிதங்களில் சரியான முகவரி இருந்தால் அக்கடிதம் உரியவருக்கு உரிய நேரத்தில் சென்று கிடைக்கும். முகவரி சரியாக இல்லை என்றால் அக்கடிதம் உரியவருக்குச் சென்று சேர்வதில் காலதாமதம் ஏற்படும்.

பல நேரங்களில் அது உரியவருக்குக் கிடைக்காமலேயே போய்விடும். கடிதத்தில் முகவரியே இல்லையென்றால் அக்கடிதம் யாருக்குமே சென்று சேராது.

இணையதள முகவரி சரியாக இருந்தால் அத்தளத்தைச்

சரியாகச் சென்றடையலாம். முகவரி சரியாக இல்லையென்றால் உரிய இணையதளத்தை உரிய நேரத்தில் சென்றடைவது கடினம். முகவரியே இல்லையென்றால் இணையதளத்தை அடையவே முடியாது.

ஒவ்வொரு இணையதளமும் எளிதில் அடையும் வகையில் ஒவ்வொரு இணையதளம் முகவரியைக் கொண்டு விளங்குகின்றன. நாம் எளிதில் மனதில் பதியவைத்து கொள்ளும் வகையில் முகவரிகள் அமைந்திருந்தாலும் கணினிக்கு முகவரிகள் தெரியாது.

முகவரிகளைக் கணினி எண்களைக் கொண்டே அடையாளம் காட்டுகிறது. எடுத்துக்காட்டாக 212.58.240.32 என்ற எண் ஒரு முகவரியின் இணையதளத்தைக் குறிக்கிறது. இதனை **IP** முகவரி என்று கூறுவதுண்டு. **Internet Portocol** என்பதன் சுருக்கம் **IP** ஆகும்.

இணையத்தில் தகவல் தேடும் வசதிகள்

விரிந்து பரந்த இந்த உலகத்தில் ஒருவருக்கு வேண்டிய தகவல்களைத் தேடிப்பிடித்தல் என்பது எளிதன்று. ஆராய்ச்சி தொடர்பாக ஒருவர் நூலகத்திற்குச் சென்று தனக்கு வேண்டிய ஒரு நூலை தேடினால் அந்நூல் அங்கு இருக்கலாம், இல்லாமல் போகலாம், அங்கிருந்து யாராவது எடுத்துப் போயிருக்கலாம் இருந்தும் கூட கிடைக்காமல் போகலாம்.

இணையம் என்பது அவ்வாறு அல்ல தேடிய நேரத்தில் தேடியதைக் கண் முன்னே கொண்டு வந்து குவித்துவிடும். சில வேளைகளில் நாம் ஒன்றைத் தேட அதைக் கொண்டு வந்து தருவதோடு மட்டுமன்றி அதனோடு தொடர்புடைய மேலும் பல தகவல்களை அள்ளித் தந்து நம்மை வியக்கவைக்கும் வகையில் இருக்கின்றன. ஆய்வுப் பணியில் ஈடுபடுவோருக்கு இணையம் மிகச்சிறந்த வழிகாட்டுதலாகவும் அமைகிறது.

வேண்டிய வேண்டியவாறு மட்டுமன்றி கூடுதலாகவும் அதே வேளையில் தனியொரு மனிதனோ அல்லது ஒரு குழுவினரோ தேடிக் கண்டுபிடிக்க முடியாதவற்றையும் மிகுந்த காலம் தேவைப்படுகின்ற தேடுதல்களைக்கூட மிக எளிதாகவும் விரைந்தும் செய்து முடிகின்ற ஆற்றல் வாய்ந்ததுதான் இணையம்.

சிறப்பு மிக்க தேடுதல் வசதிகளைப் பல நிறுவனங்கள் இணையப் பார்வையாளர்களுக்கு இலவசமாக வழங்குகின்றன.

தேடு பொறிகள்

- அலெக்ஸா **Alexa**
- கூகிள் **Google**
- யாகு **Yahoo**
- ஸ்டார்வேர் **Starware**
- தமிழ் தேடல் **W3 tamil Search**

- மொசிலா ஃபையர் பாக்ஸ் **Mozilla Firefox**
- எம்.எஸ்.என் **Msn**
- அல்டாவிஸ்டா **Alta vista**
- பிங்கு **bing**
- ஆஸ்க்.காம் **Ask.com**

இவ்வாறு தேடுப் பொறிகளில் வேண்டிய செய்திகளைச் சில நொடிப் பொழுதில் இருந்த இடத்தில் இருந்தவாறே எளிதில் பெற முடியம்.

தேடு பெறியினால் விளையும் சில நன்மைகள் இருக்கின்றன. அவை கால விரயத்தினைத் தவிர்க்கலாம் செலவு குறைவு தகவல்களை விரைந்து பெறலாம். கூடுதல் தகவல்களையும் பெறலாம் தமிழ் மொழி வழியாகவும் தேடலாம்.

இணையத்தில் கலந்துரையாடல்

இணைய வழிக் கலந்துரையாடல் இணையவழி அளவளாவுதல் இணையவழி பொழுது போக்குதல் என்று கூறுவர்.

பொழுதுபோக்கிற்காக நண்பர்கள் ஒன்று கூடி எதைப் பற்றியோ பேசி மகிழ்வது பொழுதுபோக்கு ஆகும். இதில் மகிழ்ச்சியும் பொழுதுப் போக்குமே முதன்மை நோக்கம் ஆகும்.

இணையவழி கலந்துரையாடல் என்பது ஏதேனும் ஒரு பொருள் பற்றி ஆக்கப்பூர்வமான முறையில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இணையம் வழி கூடிப் பேசுவது ஆகும். இக்கலந்துரையாடலுக்கு இ - குழு **(e - Group**) என்று குறிப்பிடுகின்றனர். இக்குழுவில் நண்பர்கள் ஓய்வான நேரங்களில் அமர்ந்து கொண்டு கணினியிலோ அலைப்பேசியிலோ நேருக்கு நேர் முகம் பார்த்து பேசுவதும் தகவல்கள் பரிமாறுவதும் போன்ற உணர்வையும் மகிழ்ச்சியையும் இம்முறையின் வழியாகப் பெற இயலும் என்பர்.

பல நிறுவனங்கள் இலவசமாக இச்சேவையை வழங்குகின்ற அவ்வகையில் **www.chatting.com** என்ற இணையதளம் குறிப்பிடத்தக்கது.

உலக இணைய வரலாறு

1969 இல் இரு கணினிகளுக்கிடையே **Log in** என்ற சொல்தான் முதன் முதலில் அனுப்பி பரிசோதனை செய்யப்பட்டது.

1971 இல் முதன் முதலாக 23 இணைய இணைப்புகள் மூலமாகப் புகழ்மிக்க 23 பல்கலைக்கழகங்கள் இணைக்கப்பட்டன.

1972 இல் பொது மக்களுக்காக இந்தத் தொடர்பு சாதனம் முதன் முதலில் இயக்கிக் காட்டப்பட்டது. இதே ஆண்டில் இங்கிலாந்தைச் சேர்ந்த விஞ்ஞானி ஒருவர் ந - அயடை ; உடன் வடிவமைத்து வெற்றி கொண்டார்.

1973 இல் ஆர்பா என்பது டார்பா என்று பெயர் மாற்றம் பெற்றது. இணையம் பற்றிய பல கருதுகோள்கள் உயிரூட்டம் பெற்றன. இணையத் தொடர்வதருக்கான நியம கடைப்பிடிப்புகள் **(TCP/IP)** உருபெற்றன.

1974 இல் இணைப்புகள் 100 எண்ணிக்கையாக அதிகரித்தது.

1976 இல் முதலாவது மின்னஞ்சல் பிரிட்டானிய மகாராணியால் அனுப்பப்பட்டது. இவர்தான் மின்னஞ்சல் அனுப்பிய முதல் அரசு தலைவர் ஆவார்.

1984 இல் இணையதளப் பெயர் பதிவு முறை தொடங்கியது இவ்வாண்டில் இணைய இணைப்புகள் 1000 எண்ணிக்கையை எட்டிப் பிடித்தது.

1985 இல் **Aol, Com, edu, gov** ஆகிய குறியீடுகள் உதயம் ஆனது.

1986 இல் **net** அறிமுகம் ஆனது.

1987 இல் **org** என்பது அறிமுகப்படுத்தப்பட்டது. மேலும் இணைய இணைப்புகள் 28000 என்ற எண்ணிக்கையை எட்டியது.

1988 இல் கணினிகளில் வைரஸ் தாக்கம் ஏற்பட்டது. இணைப்புகள் 60000 எண்ணிக்கையைத் தொட்டன. இணைய வழிக்கலந்துரையாடல் **(e - chat)** உருப்பெற்றது.

1989 இல் இணைய இணைப்புகள் ஒரு இலட்சத்திற்கும் மேல் சென்றன. **Time Berners lee** தனது இணைய

ஆராய்ச்சியின் விளைவாகக் கணினிகள் பேசும் இணைய மொழி hவஅடஇ றற ஆகியவற்றை வெளியிட்டார்.

1990 இல் **world. std. com** தனது **dial up** சேவை மூலமாக உலகின் முதல் வர்த்தக இணைப்பைத் தொடங்கியது.

1991 இல் உலகளாவிய வலைப்பின்னல் **www** நடை முறைக்கு வந்தது.

1992 இல் இணைய சமூக அமைப்ப **ISOC** உருவாக்கப்பட்டது. இணையத்தைப் பயன்படுத்துவோர் ஒரு மில்லியன் அளவு எட்டிய விவரம் பதிவானது.

1993 இல் இணைய வானொலி இணையதள பேசும்மொழி பரிமாற்றி **http** அறிமுகத்தோடு **Mosaic** உதயமானது.

1994 இல் இணையம் பிறந்து 25 ஆண்டுகள் நிறைவுற்றது. இந்த ஆண்டில் புகழ் மிக்க நிறுவனங்களான **yahoo, amazan, w3c, netscape** ஆகியவை தோன்றின.

1995 இல் புகழ்பெற்ற இணைய இயக்கிகள் **Internet explore, Mozilla** உள்ளே நுழைந்தன.

1996 இல் இணையத் தொலைபேசி, இணையத் தொலைக்காட்சி ஆகியவை தோன்றின. உலக அளவில் இணையத்தில் தகவல்களை வழங்குகின்ற **wiki, alexa** இவை வந்தன.

1997 இல் தொடுப்பில்லாத் தொடர்பு றயி அறிமுகம் செய்யப்பட்டது. 19.5 மில்லியன் இணைப்புகள் பயன்படுத்தப் பட்டுள்ளதாகக் கணக்கிடப்பட்டது.

1998 இல் கூகிள் **Google** வருகை தந்தது.

1999 இல் **my space, pay pal** இவற்றின் வருகை **blog** என்ற சொற்பயன்பாடு ஏற்பட்டது.

2000 ஆம் ஆண்டில் உலக இணையதளம் சட்டவிரோதமாக இணைய உடைப்புக் கும்பல்களின் ஆதிக்கத்திற்கு உள்ளாயின.

2001 இல் மின்னஞ்சல்கள் வைரஸ் தாக்குதல்களுக்கு ஆளாயிற்று. இவ்வாண்டை **virus of the year** என்று குறிப்பிடப்பட்டது. இணைய தகவல் களஞ்சியமான

விக்கிபீடியா **Wikipedia** தோற்றம் பெற்றது.

2002 இல் இணையம் பயன்பாட்டாளர்களின் எண்ணிக்கை 544.2 மில்லியன்களைத் தாண்டியது.

2003 இல் இணையதளப் பெயர்களின் இணைப்புச் சுட்டியான **pro, itune** அறிமுகமானது.

2004 இல் இணைய இயக்கி **fire fox** பிறந்தது.

2005 இல் இணைய உலகின் பெயர் பெற்ற ஒளிப்படத் தளமான **youtube video** உருவானது.

2006 இல் **youtube** ஐ கூகிள் நிறுவனம் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது. 92 மில்லியனுக்கு மேற்பட்ட இணையதளங்கள் வலம் வந்தன.

2007 இல் செப்டம்பர் மாதம் 30 ஆம் நாள் கணக்கின்படி இணையத்தைப் பயன் கொள்வோர் எண்ணிக்கை 1,244,449,601, க்கும் அதிகமானது.

2008 – 2015 இல் இணையம் மனிதர்களின் தேவைகளில் ஒன்றாகிவிட்டது. எண்ணிக்கை அளவு கடந்து விட்டன.

இணையத்தின் பயன்கள்

இணைய உலகம் உண்மையிலேயே விந்தையானது ஒரு மனிதனுக்கு ஓரளவு நேரமும் இணையத்தில் உலாவுவதற்குப் புரிதலும் இருந்து விட்டால் உலகையே அவன் தன் கைகளுக்குள் கொண்டு வந்து விடலாம்.

இணையம் விரிந்து பரந்து கிடக்கும் இந்த உலகையே நம் வீட்டுக்குள் கொண்டு வரும் ஆற்றல் வாய்ந்தது.

“இறந்தது காத்தல் எதிரது போற்றல்”**5 - (**தொ**.**பொ**.**மரபு**) 1610**

இணையத்தின் வழி புதியன புகுந்து, அறிவைப் பெருக்கி, சிந்தனையைச் செழிக்கச் செய்கிறது. இதன் மூலம் தகவல்களைப் பெறலாம், அளிக்கலாம், வாங்கலாம், கல்வி பயிலலாம், பயிற்றுவிக்கலாம், எவரும் - எங்கிருந்தும் - எந்த தகவல்களையும் 24 மணி நேரமும் நாடு, இனம், மொழி, என்ற எத்தகைய வேறுபாடுகளும் இன்றி பெறும் ஊடகமாக இணையம் விளங்குகிறது.

இதன் மூலம் தொலைவில் இருப்பவர்களைக் கண்காணிக்க முடியும். இவற்றின் வழி சாதனங்களையும் தகவல்களையும், கருத்துக்களையும் பகிற முடியும்.

இணையத்தில் அ முதல் ஔ வரை எந்தச் செய்தியையும் பெற முடியும். இணைய தளத்தை நண்பனாக எவ்வளவு நேரம் உறவாடினாலும் சலிப்பு ஏற்படாமல் உற்சாகம் குறையாத உணர்வோடு தகவல்களை அளிக்கும் வகையில் இணையம் திகழ்கிறது.

தமிழில் இணைய வளர்ச்சி

தமிழ் வளர்ச்சிக்கு கணினி இணையத் தொழில்நுட்பம் பெரிதும் பயன்படுகிறது. இணையம் வந்த பிறகு தான் தமிழ் தகவல்கள் கடல்கடந்து நாடுகளுக்கு உடனுக்குடன் பரவின. இணையம் உலகத்தையே ஓர் உலுக்கு உலுக்கியது.

தொடக்கத்தில் எழுத்துருச் சிக்கலும், தட்டச்சுப் பலகைச்சிக்கலும் இருந்தன. இதனால் உலகம் முழுவதும் தமிழர்களாலும், தமிழ் ஆர்வலர்களாலும் பல தமிழ்

மென்பொருள்களை உருவாக்கப்பட்டன.

தமிழ் தட்டச்சுப் பலகை குறித்த சிக்கல் ஓரளவு தீர்ந்த நிலையிலும் எழுத்துருச் சிக்கல் இருந்து வந்தது. பொறியாளர்களின் முயற்சியால் ஒருங்குறி **(Unicode)** நுட்பத்தில் தமிழ்த் தட்டச்சக்கு வழி பிறந்தது.

அச்சு இதழ்கள்போல் தமிழ் மின்னிதழ்கள் எண்ணற்றவை தோன்றின. உலக அளவில் தமிழ்ப் படைப்புகளை அறிமுகப்படுத்துவதில் வலைப்பூக்கள் பெரும் பங்காற்றுகின்றன.

செய்திகளையும் வலைப்பூக்கள் முந்தித் தருகின்றன. கட்டற்ற செய்திகளை வெளிப்படுத்தும் தன்னுரிமையை வலைப்பூக்கள் வழங்குவதால் வலைப்பதிவர்கள் பலர் எழுத முன் வந்தனர்.

வலைப்பூக்களில் படைப்புகள் மட்டுமின்றி படங்கள், ஓவியங்கள், காணொளிகள், ஒலிப்பதிவுகள் எனப் பல வடிவில் தமிழ் செய்திகள் கிடைக்கின்றன. உலகம் முழுவதும் தமிழ்ப்படைப்புகளும் படைப்பாளிகளும் கிடைத்த பயனாக அச்சுவழி கிடைத்த தமிழ்ப்படைப்புகளில் குறிப்பிட எழுத்தாளர்களின் படைப்புகள் தான் படிக்க கிடைக்கும் என்ற நிலை மாறி இணையத்தால் புதுப் புது எழுத்த்தாளர்கள் கிடைத்து தமிழ்ப்படைப்புகளின் வாசகர் தளமும் விரிவடைய செய்தனர்.

இணையத்தின் வரவால் அச்சு வடிவ அகரமுதலிகள் போல மின் அகரமுதலிகள் உருவாயின. சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி க்ரியா அகராதி, கதிரைவேள்பிள்ளை அகராதி, வின்சுலோ அகராதி, பெப்ரிசியசு அகராதி உள்ளிட்ட அகராதிகள் இணையத்தில் இலவசமாகக் கிடைக்கின்றன. தமிழ் இணையத்தில் தமிழ்சார்ந்த செய்திகள் பல இடப்பட்டிருந்தாலும் இன்னும் உள்ளிட வேண்டிய செய்திகள் பல உள்ளன. உள்ளிடப்பட்டவை பயன்படுத்துவோர் எண்ணிக்கையளவில் குறைவாகவே உள்ளனர். தமிழைப் பயன்படுத்தி மின்னஞ்சல் செய்ய இயலும் உரையாட இயலும் என்று தெரியாமல்

கணினித்துறையில் பலர் இருப்பதையும் இங்கு எண்ணிப் பார்க்க வேண்டும்.

இணையம் சார்ந்த பல கலைச்சொற்கள் தமிழில் உருவாக்கப்பட்டு வழக்கத்துக்கு வந்துள்ளன. குறிப்பாக மின்னஞ்சல், மின்வருடி, மென்பொருள், வன்பொருள், படிமக்கோப்பு, பதிவர், வலைப்பதிவு வலைப்பு, சமுக வலைத்தளம் இணையக்குழு, விசைப்பலகை, திறன்பேசி, மடிக்கணினி, மேசைக்கணினி, சுட்டி முதலான சொற்கள் பயன்பாட்டு நோக்கில் தமிழில் உருவாக்கம் பெற்றுள்ளன.

தமிழ் இணையத்தை வளர்த்தெடுக்க பல மாநாடுகள், கருத்தரங்குகள், பயிலரங்குகள், வலைப்பதிவர் சந்திப்புகள் நடத்தப்பட்டன. தமிழ் இணையத்துக்கு பல்வேறு அமைப்புகள் உருவாக்கப்பட்டன. உத்தமம் என்ற அமைப்பு தமிழ்க்கணினி இணையத் தொழில்நுட்பத்துக்கு என்ற உலகெங்கும் பரவி வாழும் தொழில் நுட்பம் தெரிந்த அறிஞர்களால் உருவாக்கப் பட்டுள்ளது. கணினித் தமிழ்ச்சங்கம் என்ற அமைப்பும் தமிழ் கணினித்துறை வளர்ச்சிக்கு உதவுகிறது.

மதுரைத்திட்டம் என்னும் தளம் தமிழின் அரிய நூல்கள் 353 தம் பக்கத்தில் யாரும் இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் வைத்துள்ளது. தமிழ் மரபுச் செல்வங்களை வெவ்வேறு வடிவங்களில் தரும் வண்ணம் பல இணைய தளங்கள் தமிழ்ச் செய்திகளைத் திரட்டிப் பாதுகாத்து வருகின்றன.

இத்திட்டத்தின் தமிழ் மரபு அறக்கட்டளை என்ற தளம் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அரிய நூல்கள் மற்றும் ஓலைச்சுவடிகள், படங்கள், ஒலிப்பதிவுகள் எனத் தமிழரின் மரபுச் செல்வங்களைத் தாங்கி அத்தளம் உள்ளது.

உலகெங்கும் எழுதும் வலைப்பதிவுகளைத் திரட்டித் தரும் திரட்டிகள் தமிழ்மொழிக்கென உருவாக்கப் பட்டுள்ளன. அவை தமிழ்மணம், தமிழ்வெளி, திரட்டி, என்னும் பெயர்கொண்ட திரட்டிகள் தமிழ் எழுதும் பதிவர்களின் படைப்புகளை உலக அளவில் திரட்டித்

தந்து தமிழ்ப்படைப்புகளுக்கு உலக அளவில் அங்கீகாரம் வழங்கியுள்ளது.

தமிழ் இணைய மாநாடுகள்

வ.எண் மாநாடுகள் ஆண்டு நடந்த இடம்

1 முதல் உலகத் தமிழ் இணைய மாநாடு 1997 சிங்கப்பூர்

2 இரண்டாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 1999 இந்தியா தமிழ்நாடு சென்னை

3 மூன்றாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2000 சிங்கப்பூர்

4 நான்காம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2001 மலேசியா கோலாலம்பூர்

5 ஐந்தாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2002 அமெரிக்கா சான்பிரான்சிசுகோ

6 ஆறாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2003 இந்தியா - தமிழ்நாடு சென்னை

7 ஏழாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2004 சிங்கப்பூர்

8 எட்டாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2009 ஜெர்மனி - கொலோன்

9 ஒன்பதாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2010 இந்தியா - தமிழ்நாடு-சென்னை

10 பத்தாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2011 அமெரிக்கா பிலிடெல்பியா பென்சில் வேனியா

11 பதினொறாவது உலகத் தமிழ் இணைய மாநாடு 2012 இந்தியா - தமிழ்நாடு-சென்னை

12 பனிரண்டாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2013 சிங்கப்பூர் கோலாலம்பூர்

13 பதிமூன்றாம் உலகத் தமிழ் இணைய மாநாடு 2014 மலேசிய

14 பதிநான்காவது உலகத் தமிழ் இணைய மாநாடு 2015 சிங்கப்பூர்

தமிழ்ச் சொற்களை அகரவரிசையில் தரும் வண்ணம் மென்பொருள்கள் இணையத்தில் உள்ளன. தட்டச்சிட்டால் ஒலித்துக் காட்டும் மென்பொருள்கள் வெளிவந்துள்ளன. விரும்பியவண்ணம் எழுத்துகளை மாற்றித் தரும் எழுத்துமாற்றிகளும் தமிழில்

உருவாக்கப்பட்டுள்ளன.

இணைய வளர்ச்சியால் தமிழ் மொழி பெயர்ப்பு புதிய உணர்ச்சி பெற்றுள்ளன. தமிழ்க்கல்வியை எளிமைப்படுத்தி வழங்கும் வகையில் பல இணையதளங்கள் உள்ளன.

இன்றைய அனைத்து அதிர்வுகளையும் உலக அளவில் உடனுக்குடன் பரிமாறிக் கொள்ளும் இணையத்திற்கு ஈடுகொடுத்துள்ள தமிழ் வளர்ச்சி வருங்காலத்தில் இன்னும் விரைவாக வளரும்.

தமிழ் இணைய மாநாடுகள்

உலகில் எந்த ஓர் அமைப்பு அல்லது நிறுவனமாக இருந்தாலும் அது தோன்றுவதற்கு முன்பு மக்கள் மத்தியில் தனது செல்வாக்கை நிலை நிறுத்த வேண்டும். அதற்கு மாநாடுகள், கருத்தரங்குகள் மிக முக்கியப் பங்கினை வகிக்கின்றன. தமிழ் இணையதளங்கள் அதிகமாக தோன்றிய காலக்கட்டத்தில் அதன் வளர்ச்சிப்பணியை எட்டுவதற்கும் பல கருத்தரங்குகளும், மாநாடுகளும் அரசு மற்றும் தனியார் அமைப்புகளாலும் நடத்தப்பட்டன. உலகத் தமிழ் தகவல் தொழில்நுட்ப மன்றம் எனும் அமைப்பு தமிழ் இணைய மாநாடுகளை நடத்தி வருகிறது. இந்த அமைப்பு உலகின் பல்வேறு நாடுகளில் 14 தமிழ் இணைய மாநாடுகளை நடத்தியுள்ளது. மாநாடுகள் நடைபெற்ற ஆண்டு இடம் குறித்த விவரங்கள் காண்போம்.

முதல் தமிழ் இணைய மாநாடு

முதல் உலகத்தமிழ் இணைய மாநாடு 1997 ஆம் ஆண்டு மே 17, 18, ஆம் நாட்களில் சிங்கப்பூரில் நடந்தேறின. சிங்கப்பூரில் உள்ள நாங்யாங் பல்கலைக்கழகப் பேராசிரியர் நா.கோவிந்தசாமியின் ஒட்டு மொத்தமான முயற்சியால் தமிழ் இணையம் 97 என்ற பெயரில் நடைப்பெற்றுள்ளது. 1994 ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற கருத்தரங்கிற்கும் இம்மாநாட்டிற்கும் உள்ள தொடர்பு இணையம் என்று குறிப்பிடுகின்றனர்.

கருப்பொருளும் - கலந்தாய்வும்

இணைய தளங்களில் தமிழ்ப் பொருண்மைகளை மிகைப்படுத்துதல்.

விசைப்பலகையைத் தரப்படுத்துதல், தமிழ் எழுத்துரு குறியீட்டைத் தரப்படுத்துதல்.

இணைய தளங்களையும், இணைய தளப்பக்கங்களையும் தரப்படுத்துதல்.

அடுத்த தமிழ் இணையம் 98 மாநாடு பற்றி முடிவு செய்தல்.

இந்த மாநாட்டில் எழுத்தாளர் சுஜாதா, அண்ணா பல்கலைக் கழகக் கணிப்பொறி பேராசிரியர் வி.குப்புசாமி இலங்கைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் எஸ்.டி. நந்தசாரா சுவிட்சர்லாந்து கு.கல்யாணசுந்தரம் சென்னை எழுத்தாளர் மாலன், பென்ஸில்வேனியப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்கள் ரால்டு ஷிஃபமேன் மற்றும் வாசு அரங்கநாதன் மலேசிய நாட்டுக் கணிப்பொறியாளர் முத்து நெடுமாறன் சிங்கப்பூர் நான்யாங் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் நா.கோவிந்தசாமி மற்றும் டேன் டின்.வீ ஆப்பிள் மென்பொருள் நிறுவனர் என்.அன்பரசன் ஆகிய பதினொருவரும் கலந்து கொண்டு கருத்துக்களை முன்வைத்துள்ளனர். இவர்கள் அனைவரும் உறுப்பினர்களாகவும் இருந்துள்ளனர்.

## இரண்டாம் தமிழ் இணையமாநாடு

தகவல் புரட்சியின் பயனை மக்களும் அறியத்தக்க வகையில் இரண்டாம் மாநாடு சென்னையில் நடத்தப்பட்டது. 1999 ஆம் ஆண்டு பிப்ரவரி 7, 8 ஆம் நாட்களில் அன்றைய முதல்வர் கலைஞர் மு.கருணாநிதி அவர்களின் முன்னிலையில் இம்மாநாடு நடைப்பெற்றது. இதற்குத் தமிழ் இணையம் 99 என்று பெயர் சூட்டினர் இம்மாநாட்டின் வரவேற்புக் குழுத் தலைவராக நடுவண் அரசின் வணிகம் மற்றும் தொழில்துறை அமைச்சர் மாண்புமிகு. முரசொலிமாறன் அவர்கள் இருந்துள்ளார்.

மாநாட்டின் பொருண்மை

தமிழ் எழுத்துருக் குறியீட்டுத் தரப்பாடு

தமிழ் விசைப்பலகைத் தரப்பாடு

கணிப்பொறி, பல்லூடகம் மற்றும் இணையம் கணிப்பொறியின் பிற பயன்பாடுகள் ஆகியவற்றில் தமிழ்மொழியின் இன்றைய பயன்பாட்டு நிலை என்ற பொருண்மைகளில் கருத்தரங்கம் நடைப்பெற்றன.

இந்த மாநாட்டில் தமிழ்நாட்டிலுள்ள பல்வேறு கல்வியாளர்கள், மொழிவாணர்கள், கணிப்பொறி வல்லுநர்கள், சொற்செயலியை உருவாக்கியவர்கள், ஆராய்ச்சியாளர்கள் போன்றோர் கலந்து கொண்டனர். மேலும் சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, கனடா, பிரன்சு, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளின் அரசு உறுப்பினர்களுக்கும் அறிவியல் தமிழ் எழுத்து முறையை உலகம் முழுவதிலும் இணையத்தில் பயன்படுத்த வேண்டும் என்றனர். அம்முறையில் டாம் **TAM** வகையும் ஆங்கில தமிழ்க்கலப்பு எழுத்துரு முறையாக **TAB** வகையும் அறிமுகப்படுத்தப்பட்டன. மேலும், தமிழ் மென்பொருள் ஆராய்ச்சி மானியக்குழு அமைப்பதற்கான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தமிழின் ஒலி வடிவம், வரி வடிவம் அறிவியல் மொழியாக மட்டுமின்றிப் பொருளியல் மொழியாகவும் இயங்கச் செய்தல் ஆகிய பொருள்களிலும் ஆய்வுக்கட்டுரை கணினித்திரைக் காட்சிகள்

இடம்பெற்றன. விசைப் பலகையில் ஏற்பட்டு வந்த குழப்பத்திற்கு இம்மாநாடு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது.

இருபத்தியோராம் நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்கும் காலக்கட்டத்தில் உலகத் தமிழ் இணையப் பல்கலைக் கழகம் ஒன்றைக் கணிப்பொறி வாயிலாகத் தமிழ்நாடு அரசு அமைக்க உள்ளது என்ற அறிவிப்பை இம்மாநாட்டில் அன்றைய முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அறிவித்தார். மேலும் தமிழ் மென்பொருள் வளர்ச்சி நிதி என்று அறிவித்தார். முதற்கட்டமாக அரசு நிதியிலிருந்து ஐந்து கோடி ஒதுக்கப்படுவதாகவும் அறிவித்தார்.

ஓராண்டுக்குள் ஓராயிரம் சமுதாய இணையங்களை நிறுவுவதற்கும் அரசு படிவங்கள் எல்லாம் தமிழ் இணையத்தின் மூலம் தடையின்றிக் கிடைப்பதற்கும் வழிவகை செய்யப்படும் என்று தெரிவித்தார்.

மாநாட்டில் பல்வேறு அறிஞர் பெருமக்கள் கலந்து கொண்டனர். சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகப் பேராசிரியர், முனைவர் நா.கோவிந்தசாமி, முரசு அஞ்சல் முரசுநெடுமாறன் மகன் முத்தெழிலன், கனடா சீனிவாசன் இலங்கையைச் சேர்ந்த யாழின் சண்முகலிங்கம் இராமலிங்கம் ஜப்பானனைச் சேர்ந்த மியாமர்மின் போன்ற அயல்நாட்டு அறிஞர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

சென்னை சேர்ந்த கிராண்ட பொறியில் கல்லூரியின் தலைமைப் பேராசிரியரும், பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணை வேந்தருமான திரு.பொன்னவைக்கோ, மனோஜ் அண்ணாத்துரை இன்.தாம்சவுரிராசன் இந்தியா டுடே செந்தில்நாதன் மற்றும் சேது பிழைதிருத்தியை உருவாக்கிய பேராசிரியர் வா.மு.சே.ஆண்டவர் ஆகியோர் இம்மாநாட்டில் கலந்து கொண்டனர். இவர்களின் கருத்துக்களால் தமிழ் இணையம் 99 என்ற மாநாடு சிறப்பு பெற்றன. எழுத்துருக் குறியீட்டுத் தரப்பாடு தொடர்பாக 12 கட்டுரைகளும் பல்லூடகத்திலும் இணையத்திலும் கணினியிலும் தமிழின் பயன்பாடு தொடர்பாக 8

கட்டுரைகளும் படிக்கப்பட்டன.

மூன்றாம் தமிழ் இணையமாநாடு

மூன்றாம் தமிழ் இணைய மாநாடு இலங்கையில் உள்ள கொழும்புவில் தோட்டத் தொழிலாளர்களின் அமைச்சர் தொண்டைமான் தலைமையில் நடைபெறுவதாக இருந்தது. ஆனால் தவிர்க்க முடியாத சில காரணங்களால் சிங்கப்பூரில் ஜீலை மாதம் 22, 23 ஆம் நாட்களில் நடைபெற்றன. சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகப் பேராசிரியர் அருண்மகிழ்நன் ஒருங்கிணைப்பில் இம்மாநாடு நடைப்பெற்றது. இம்மாநாட்டில் உத்தமம் **International Forun for Information Technology in Tamil (INFITT)** என்ற அமைப்புத் தொடங்கப்பட்டது.

செயல்பாடு

இணையதளப் பெயர்கள் தமிழ் எழுத்து கலைச்சொல்லாக்கம் ஒருங்குறி முறை ஆகியன பற்றி விவாதிக்கப்பட்டன. இம்மாநாட்டின் வழியாக உலக அளவில் அணைவரும் தமிழ் இணைய மாநாட்டில் செய்திகளை அறிந்து கொள்ள **www.infitt.org** என்ற இணையதளம் உருவாக்கப்பட்டு பயன்பாட்டிற்கு வந்தது. இறுதி விழாவில் சிங்கப்பூர் அதிபர் ஆர்.நாதன் கலந்து கொண்டார்.

தமிழ் மரபு அறக்கட்டளைத் தொடக்கம்

ஒளி எழுத்துப் படிப்பான் மூலமாக ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து கணிப்பொறி மையமாக்கி இணையத்தில் தொகுக்க முனைவர் நா.கண்ணன் தலைமயில் அமைப்பு ஒன்று துவங்கப்பட்டது. தமிழ் மரபு அறக்கட்டளை என்ற இவ்வமைப்பிற்கு மலேசிய அமைச்சர் ட.கோவிந்தசாமி முதற்கட்ட நிதியாக பத்தாயிரம் டாலர்களை வழங்கி தமிழ் ஓலைச்சுடிக்கு உயிர் கொடுத்தார். இம்மாநாட்டில் ஐம்பது ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கப்பட்டன.

நான்காம் தமிழ் இணைய மாநாடு

இம்மாநாடு 2001 ஆம் ஆண்டு ஆகஸ்டு 23, 24, 25 ஆகிய தேதிகளில் மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் உலக வர்த்தக மையத்தில் நடைபெற்றது. மாநாட்டின் துவக்கவிழாவில் மலேசிய பிரதமர் மகாதீர்முகது அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்.

கருப்பொருள்

தமிழை மின் வணிக மொழியாக்குதல் NET,FOR,LIFE, என்னும் கணிப்பொறிக் கல்வித்திட்டத்தை வகுத்தமைத்து பள்ளிக் குழந்தைகள் மழலையர் நடுவர் முதியோர் என மூன்று நிலைகளில் வழங்குதல் போன்ற பொருள்களிலும் கலந்தாய்வு நடைபெற்றன.

மாநாட்டில் விவாதங்கள்

தற்போதைய தமிழ் எழுத்துரு சிக்கல்கள் மொழி பெயர்ப்பிகள் தமிழ் ஒளி எழுத்துப் படிப்பான் ஆகியன முக்கிய விவாதங்களாக இம்மாநாட்டில் எடுத்துக் கொள்ளப்பட்டன.

அறக்கட்டளை

ஒளி எழுத்துப் படிப்பான் மூலமாக ஓலைச்சுடிகளைப் பாதுகாத்து அவற்றைக் கணிப்பொறி மயமாக்கி இணையத்தில் தொகுக்க முனைவர் ந.கண்ணன் தலைமையில் அமைப்பு ஒன்று துவங்கப்பட்டது. தமிழ் மரபு அறக்கட்டளை என்ற இவ்வமைப்பிற்கு மலேசிய அமைச்சர் டத்தோ சாமுவேலு முதற்கட்ட நிதியாக பத்தாயிரம் டாலர்களை வழங்கித் தமிழ் ஓலைச்சுவடிக்கு உயிர் கொடுத்தார். சர்வதேச அளவில் நூற்றுக்கணக்கான அறிஞர்கள் கலந்து கொண்டு இம்மாநாட்டில் ஐம்பது ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கப்பட்டன.

## ஐந்தாம் தமிழ் இணைய மாநாடு

ஐந்தாம் அனைத்துலகத் தமிழ் இணைய மாநாடு மற்றும் கண்காட்சி கலிபோர்னியாவில் டாஸ்டர் நகரில் 2002 ஆம் ஆண்டு செப்டம்பர் 27, 28, 29 ஆகிய தேதிகளில் நடைப்பெற்றது.

கருப்பொருள்

இம்மாநாட்டின் கருப்பொருளாக மின் இணையப் பயன்பாட்டில் மக்களிடையே நிலவும் இடைவெளியைக் குறைத்தல் இருந்தது. இம்மாநாட்டுத் தலைவர் திரு. மணிவண்ணன் முயற்சியால் உத்தமம் அமெரிக்காவில் ஒரு பதிவு பெற்ற அமைப்பாக பதிவுசெய்யப்பட்டது.

திட்டப்பணிகள்

தமிழ் தகவல் தொழில் நுட்பக் கண்காட்சி உள்ளிட்ட பல திட்டப்பணிகள் ஆய்வு செய்யப்பட்டன. தமிழ் ஒருங்குறி சிக்கல்கள் தொடர்பாக ஒருங்குறி குழும உறுப்பினர்களோடு கலந்தாய்வும் செய்யப்பட்டன. உலக அளவில் நடத்தப்பட்ட இணையதள வடிவமைப்புப் போட்டிகளும் நடத்தப்பட்டன. இம்மாநாட்டில் தமிழ் மரபு அறக்கட்டளை தொடங்கப்பட்டது. தமிழ் இணையம் மற்றும் தமிழ்க்கணினி சார்ந்த தொழில் நுட்ப வணிகச் சிக்கல்கள் பற்றி விவாதிக்கப்பட்டன. மின் அஞ்சல் இணையதளங்கள் வழி தகவல் பறிமாற்றம் பல்லூடகம் அடிப்படையில் இணைய வழிக்கல்வி, இணைய வழி நூலகங்கள், மின் வணிகம் மின் ஆளுமை போன்ற தலைப்புகளில் விவாதங்கள் நடைப்பெற்றன.

ஆறாம் தமிழ் இணைய மாநாடு

2003 ஆம் ஆண்டு சென்னையில் ஆகஸ்டு மாதம் 22, 23 ஆம் தேதிகளில் இரண்டாவது முறையாக அண்ணா பல்கலைக்கழகத்தில் நடைபெற்றன. தமிழ் கல்விக்குத் தகவல் தொழில்நுட்பம் **It for Education in tamil** என்ற பொருண்மையில் கட்டுரைகள் விவாதங்கள் நடைப்பெற்றன.

தமிழ்த் தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியை மக்கள் பார்வைக்கு எடுத்துச் செல்லுதல்

கல்லூரி மாணவர்களின் தமிழ் தகவல் தொழில் நுட்ப ஆர்வத்தை ஊக்குவித்தல்

தமிழ்த் தகவல் தொழில் நுட்ப பயன்பாட்டில் பள்ளி மாணவர்களை ஈடுபடுத்துதல்

தரப்படுத்தப்பட்ட தமிழ் எழுத்து விசைப்பலகை ஆகியவற்றை அனைவரும் பயன்படுத்தும் வகையில் விழிப்புணர்வு ஊட்டுதல்

கணினித்தமிழ் தொழில் நுட்ப வளர்ச்சிகளைக் கருத்தரங்கில் கலந்தாய்வு செய்தல்

ஒருங்குறி தமிழ் எழுத்துத் தரப்பாட்டில் உள்ள சிக்கல்கள் பற்றி ஆய்தல்

தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் இணைய வழிக்கல்வியை உலக தழுவி வாழும் தமிழர்கள் அனைவரும் பயன்படுத்திக் கொள்ளத் தேவையான வழிவகைக்கள் பற்றி ஆய்தல்.

தமிழ் மொழிக்கான ரோம வரிவடிவத்தினைத் தரப்படுத்துதல்

தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பற்றி ஆராய்தல்

இணையத் தளங்களுக்கு தமிழ் முகவரி **vrl in tamil** வழங்கல் தொடர்பான கலந்தாய்வு.

தமிழக அரசின் மின் ஆளுமை, மின்சேவை போன்ற தமிழ்த் தகவல் தொழில் நுட்பக் கோட்பாடுகளைத் தீவிரமாகச் செயல்படுத்தத் தேவையான வழிவகைகள் பற்றி ஆய்தல் போன்ற நோக்கங்களாக முன்வைக்கப்பட்டன. மேலும் இம்மாநாட்டில் 58

மூன்றாவது முறையாக இணையத்தில் தமிழை ஏற்றி அழுகுப்பார்த்த போராசிரியர் நா.கோவிந்தசாமி அவர்களின் நாடான சிங்கப்பூரில் 2004 டிசம்பர் திங்கள் 11, 12 ஆகிய நாட்களில் நடைபெற்றன. இம்மாநாடு நாளைய தமிழ்த் தகவல் தொழில் நுட்பம் என்னும் கருப்பொருளில் தொழில் நுட்ப வளர்ச்சிப் பணிகள் பற்றிய கலந்தாய்வும் நடைபெற்றன. இம்மாநாட்டில் 38 ஆய்வுக் கட்டுரைகள் வாசிக்கப்பட்டன.

இதனைத் தொடர்ந்து நான்கு ஆண்டுகளுக்கு பிறகுதான் இணைய மாநாடுகள் நடைபெற்றன. அதுவரைக்கும் ஆலோசனையாகவே இருந்தது.

எட்டாம் தமிழ் இணைய மாநாடு

2009 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 23, 24, 25 ஆகிய நாட்களில் தமிழ் இணைய மாநாடு ஜெர்மனியில் கொலோன் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. இம்மாநாடு கணினிவழிக் காண்போம் தமிழ் என்பதைப் கருப்பொருளாகக் கொண்டிருந்தது.

ஒன்பதாவது தமிழ் இணைய மாநாடு

உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாட்டுடன் இணைந்து உலகத் தமிழ் இணைய மாநாடு கோவையில் ஜீன் 23, 24, 25, 26, 27, 2010 ஆம் ஆண்டு சிறப்புடன் நடைப்பெற்றன. இம்மாநாட்டில் தமிழ்க் கணினியம், தமிழ் இணையம் ஆகியவற்றின் அண்மைக்கால முன்னேற்றங்கள் பெருமுயற்சிகள் குறித்த கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவும் கால மலர்ச்சிக்கேற்ப வளர்ந்து வரும் புதிய சிந்தனைகளுக்கு வடிவம் தரும் தீர்வுகளை நோக்கி முன்னேற வழிவகுக்கப்பட்டன.

மாநாட்டின் பொருள்

கணினித் தமிழ் மொழி கற்றல் மற்றும் கற்பித்தல் தொடர்பாக 21 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

இணைய வழிக் கல்வி தொடர்பாக 6 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கணினி மொழியியல் தொடர்பாக 21 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கணினி வழித் தமிழ்மொழிச் சொற்திருத்திகள் தொடர்பாக 6 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கணினியில் தமிழ்ப் பேச்சு மற்றும் சொற்பகுப்பு குறித்து 13 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

தமிழ் மின் தரவு மற்றும் மின்னகராதிகள் குறித்து 12 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

இணையத் தொழில் நுட்பத்தில் தமிழ்மொழி செயலிகள் என்ற பொருளில் 5 ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இதுபோன்ற பல கட்டுரைகள் தொகுத்து இடம் பெறச்செய்தனர்.

மொத்தமாக 16 தலைப்புகளில் 140 கட்டரைகள் வாசிக்கப்பட்டன. இதுவரை நடந்து முடிந்த இணைய மாநாடுகளிலேயே இந்த மாநாட்டில் அதிகமான கட்டுரைகள் வாசிக்கப்பட்டன. இந்த இணைய மாநாட்டில் வலைப்பூக்களின் வரவும், பங்களிப்பும், தமிழ் விக்கிப்பீடியா, தமிழ் மரபு, அறக்கட்டளை, வலைப்பூக்களின் திரட்டிக் குழு போன்ற தலைப்புகளில் விவாதங்களும் நடந்தன. இணையக் கண்காட்சியும் இடம் பெற்றது.

இவை அனைத்தும் கோவைக்கு வந்த பார்வையாளர்களை வெகுவாக கவர்ந்தன. இம்மாநாட்டில் உலகில் வாழும் பல்வேறு நாடுகளிலிருந்தும், கணினித் துறைச் சார்ந்த வல்லுநர்கள், பல்கலைக்கழகம் மாணவர்கள் ஆசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியாகள், மாணவர்கள், கலந்துகொண்டனர். இம்மாநாட்டில் வாசிக்கப்பட்ட அனைத்துக் கட்டுரைகளையும் உலகம் முழுவதும் உள்ள

தமிழர்கள் கண்டு கேட்டு மகிழும் வகையில் உத்தமம் இணைய முகவரியில் கோப்புகளாகச் சேமித்து வைக்கப்பட்டு உள்ளது.

பத்தாவது தமிழ் இணைய மாநாடு

பத்தாவது இணையமாநாடு அமெரிக்காவில் பெனிஸில்வேனியப் பல்கலைக் கழகத்தில் ஜீன் மாதம் 17, 18, 19, 2011 ஆம் ஆண்டு கணினியினுடே செம்மொழி **(Tamil Literature through Computer)** என்ற பெருண்மையில் நடைப்பெற்றது.

ஆய்வரங்குகள்

- கணினியினுடே செம்மொழி
- கணினி இணையம் வழி தமிழ் மொழி கற்றல் கற்பித்தல்
- செயற்கைத் திறனாய்வு
- கணினி மொழியியல்
- மின் அகராதி
- வலைப் பூக்கள்
- விக்கப்பீடியா தமிழ் நிரலிகள்
- மின் வணிகம்
- இயற்கை மொழிப் பகுப்பாய்வு
- மொழிக் கொள்கை
- கல்வெட்டுத் தமிழ்
- பேச்சுத் தமிழ்
- தொழில் நுட்பத்தின் பங்கு

பதினொறாவது தமிழ் இணைய மாநாடு

பதினொறாவது இணையமாநாடு தமிழ் நாட்டில் அண்ணாமலைப் பல்க்கலைக் கழகத்தில் டிசம்பர் மாதம் 28, 29, 30, 2012 ஆகிய தேதிகளில் நடைபெற்றன. அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையுடன் உத்தமம் மாநாடு நடைபெற்றது. இம்மாநாட்டில் செல்பேசி மற்றும் பலகைக் கணினிகளில் தமிழ்க் கணினி என்ற பொருண்மையில் நடைபெற்றது.

இம்மாநாட்டில் மொத்தம் 72 கட்டுரைகள் வாசிக்கப்பட்டன இணையம் தொடர்பாக 12 கட்டுரைகளும், மென்பொருள்கள் தொடர்பாக 8 கட்டுரைகளும், தரவுகள் தொடர்பாக 7 கட்டுரைகளும், கணினிமொழியியல், இயற்கை, மொழிபெயர்ப்பு தொடர்பாக 8 கட்டுரைகளும், கல்வி தொடர்பாக 27 கட்டுரைகளும் படிக்கப்பட்டு விதிக்கப்பட்டன.

பன்னிரண்டாவது உலகத் தமிழ் இணையமாநாடு

உலகத் தமிழ்த் தகவல் தொழில் நுட்ப மன்றம் உத்தமம் அமைப்பு 12 வது உலகத்தமிழ் இணைய மாநாட்டை மலேசியாவின் முதன்மைப் பல்கலைக்கழகமான மலாயாப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து நடத்தியது. மலாயாப் பல்கலைக்கழகத்தின் மொழி மொழியியல் புலம் தகவல் தொழில்நுட்ப நடுவம் ஆகியவற்றுடன் இணைந்து திதியான எண்ணிமம் திட்டத்தின் ஆதரவுடன் இம்மாநாடு நடைப்பெற்றது.

கணினி இணையம் ஆகிய தொடர்பாகத் தமிழின் பயன்பாடுகள் பற்றிய ஆய்வுகள் உலகெங்கும் தமிழர்களிடையே பரவும் வகையில் கடந்த பத்தாண்டுகளுக்கும் மேலாக உத்தமம் அமைப்பு உலகத்தமிழ் மாநாடுகளை நடத்தி வருகிறது. உத்தமம் உலகத்தமிழர்களை இணையத்தின் வாயிலாக இணைப்பதில் வெற்றி கண்டுள்ளது.

இதுவரை எட்டு மாநாடுகளை அமெரிக்கா, சிங்கப்பூர், மலேசியா, ஜெர்மனி, இந்தியா ஆகிய நாடுகளில் முன்னணிப் பல்கலைக் கழகங்களோடு இணைந்தும், தமிழகத்தில் மூன்று மாநாடுகளை தமிழக அரசின் முழு ஆதரவோடும் உத்தமம் நடத்தியிருக்கிறது என்பது குறிப்பிடத் தக்கது. மலேசியாவின் தலைநகரம் கோலாலம்பூரில் உள்ள மலாயாப் பல்கலைக்கழகத்தின் ஆய்வு மேலாண்மை கண்காணிப்பு நடுவத்தில் ஆகஸ்டு 15 முதல் 18 வரை ஆகிய ஐந்து நாட்களும் 12 வது உலகத்தமிழ் இணைய மாநாடு நடைப்பெற்றது. உத்தமத்தின் தலைவர் சி.ம.இளந்தமிழ் அவர்கள், மாநாட்டின் உள்;ர்க் குழுவுக்குத் தலைமை தாங்கவிருக்கிறார். உத்தமம் அமைப்பின் மேனாள் தலைவர் திரு மணி பொறுப்பேற்று இருந்தார்.

முந்தைய இணைய மாநாடுகளைப் போலவே 2013 ஆம் ஆண்டு நடந்த மாநாடும் கருத்தரங்கு, கண்காட்சி, மக்கள் கூடம் என்று மூன்று முனைகளில் செயல்படுத்தினர். ஆய்வுக் கருத்தரங்கு மற்றும் பயிலரங்கு ஆகஸ்டு 15, 16,

17, ஆகிய மூன்று நாட்களில் நடந்தது. கண்காட்சியும் மக்கள் கூடமும் ஆகஸ்டு 16, 17, 18 ஆகிய மூன்று நாட்களில் நடந்தது. மாநாட்டுக்குப் பதிவு செய்த பேராளர்கள் மட்டுமே கருத்தரங்கு மற்றும் பயிலரங்கில் கலந்து கொண்டனர்.

கருத்தரங்குகளில் பல்வேறு ஆய்வாளர்கள் கணினித்தமிழ் குறித்த தங்களின் ஆய்வுகளை ஏனைய ஆய்வாளர்களுடன் பகிர்ந்து கொண்டனர்.

இணைய மாநாடுகள் ஆய்வாளர்களின் கருத்துப் பரிமாற்றத்துக்கு வழிவகுப்பது மட்டுமல்லாமல் மக்கள் கூடத்தின் மூலம் கணித்தமிழ் நுட்பங்களைப் பரப்பதல் கணித்தமிழ் மென்பொருட்கள் மற்றும் கருவிகளைக் கண்காட்சிகள் மூலம் பொதுமக்களுக்கு அறிமுகம் செய்தல் போன்ற பல்வேறு செயல்பாடுகளிலும் ஈடுபட்டு வந்திருக்கின்றன. என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாண்டு மாநாட்டின் மக்கள் கூடம் மூலம் கணித்தமிழ் நுட்பங்களை இத்துறையின் வல்லுநர்கள் மற்றும் மாணவர்களிடையே பரப்புதல் பயிலரங்குகள் நடத்தி கணித்தமிழின் நுட்பங்களைப் பயிற்றுவித்தல் கணினி வழியாகக் கற்கும் மற்றும் கற்பிக்கும் பல்வேறு முறைகளை ஆசிரியர்களிடம் பரப்புதல் போன்ற முயற்சிகளில் ஈடுபட்டிருந்தனர்.

கட்டுரைகள் எதிர்பார்த்த தலைப்புகள்

செல்பேசிகள் மற்றும் பலகைக் கணினிகளில் முக்கியமாக ஐ.ஓ.எஸ், திறன்பேசி மற்றும் விண்டோஸ் தளங்களில் தமிழைப் படித்தல், தமிழில் எழுதுதல்.

மின் நூல்கள், மின் இதழ்கள் ஆகியவற்றைக் கைக் கருவிகளில் கொண்டுவர உதவும் செயலிகள் மற்றும் தொழில்நுட்பம்.

ஐ.ஓ.எஸ், திறன்பேசி, விண்டோஸ் மற்றும் எச்.டி.எம்.எல் 5 குறுஞ் செயலிகள் திறவூற்றுத் தமிழ் மென்பொருள்கள், தன்மொழியாக்கல்

இயன்மொழிப் பகுப்பாய்வு பிழைதிருத்தி தமிழ் எழுத்துரு பகுப்பு ஒலி உணர்தல் தேடல்பொறிகள், இயந்திர மொழிமாற்றம் தகவல் அகழ்தல் போன்றவை

தமிழ் இணையத்தின் தற்போதைய நிலை வலைப்பதிவு சமூக வலைத்தளங்கள் விக்கிப்பீடியா குரல் வலை போன்றவை

தமிழ் தரவுத்தளங்கள்

கணினி வழி தமிழ் கற்றல் மற்றும் கற்பித்தல் குறித்தான ஆய்வுகள்.

தமிழ் கணினி சொல்லாக்க ஆய்வுகள்

கணினி வழி தமிழ்மொழி பகுப்பாய்தல் மற்றும் கணினிக்கு தமிழ் மொழியறிவு ஊட்டல் பற்றிய ஆய்வுகள்.

கட்டுரை வாசிப்புகள்

கருத்தரங்கில் மொத்தம் 101 ஆராய்ச்சி கட்டுரைகள் படைக்கப்பட்டன. அவை கணினி மொழியியல், இயற்கை மொழி ஆய்வு, மொழிக் கருவிகள், இணையமும் மென்பொருளும், செல்பேசிகளும் கைகருவிகளும், கல்வி ஆகிய துறைகளின் கீழ் படைக்கப்பட்டன. மொத்தம் 18 அமர்வுகளாக இந்த கட்டுரைகள் படைக்கப்பட்டு அவைமீதான விவாதங்களும் திகழ்ந்தன.

சிறந்த நான்கு கட்டுரைகளுக்கு பேராசிரியர் எம்.ஆனந்தகிருஷ்ணன் விருதுகள் அழித்தார். 2012 ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட்ட இந்த விருதுகள் அவ்வாண்டு இரண்டு சிறந்த கட்டுரைகளுக்கு வழங்கப்பட்டன. இம்முறை முதல் நான்கு கட்டுரைகளுக்கு வழங்கப்படும்.

தமிழில் பேசுவதை திறன்பேசி கைப்பேசி மூலமாக ஆங்கில வாக்கியங்களாக மாற்றி குறுஞ்செய்தியாக அனுப்பி பெறும் கைப்பேசியில,; அதனை மீண்டும் தமிழ்முதலாக மாற்றி அளிக்கும் செயலி தமிழ் மட்டுமே அறிந்திருக்கும் மக்களுக்கு மிகவும் பலன் தரக்கூடியது. இது பல துறைகளை ஒருகிணைத்து மொழிகளுக்கிடையிலும் மொழி மாற்றம் எழுத்திலிருந்து ஒலியாக்கம் உருவாக்கப்படும் ஆராய்ச்சி என்பது குறிப்படத்தக்கது. விக்ரம் ஸ்ரீசீனிவாசனின் ஆராய்ச்சி கட்டுரை ஆகும்.

பலகைக் கணினிகளில் எழுதப்படும் தமிழ் எழுத்துகளை உணர்வதற்கான வழிமுறைகளை அறிமுகப்படுத்துகிறது.

ராஜேஸ்வரி ஸ்ரீரிதர் மற்றும் பிறரின் கட்டுரைகள் ஒளிவகை எழுத்துணர்தலில் ஏற்படும் பிழைகளை கனைவதற்கு தமிழ் இலக்கன விதிகளைப் பயன்படுத்துகிறது.

இம்மாநாட்டின் தீர்மானங்கள்

தமிழ் தகவல் தொழில் நுட்பத்துக்கும் மொழியியலுக்குமான சார்வதேச ஆராய்ச்சி இதழ் ஒன்றை உத்தமம் தொடங்கும்.

ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்குமான மின் கல்வி இணைய தளத்தை உத்தமம் தொடக்கம்.

தமிழ்க் கணினி ஆராய்சியாளர்களும் ஆராய்ச்சி மாணவர்களுக்கும் உதவும் வகையில் ஊடாடல் அறிவுத்தளம் ஒன்றை உத்தமம் ஆரம்பிக்கும்.

பதிமூன்றாவது உலக தமிழ் இணைய மாநாடு

புதுச்சேரியில் செப்டம்பர் 19 முதல் 21 ஆம் தேதியில் உத்தமம் அமைப்பில் 13 வது உலகத் தமிழ் இணைய மாநாடு நடைபெற்றது.

தமிழ்க்கணினி வல்லுநர்கள் முந்நூறுக்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டு இந்த மாநாட்டில் கட்டுரை படைத்தனர். சிறப்பு அமர்வுகளில் கணினி வல்லுநர்கள் கணினி இணையம் கையடக்க கருவிகளில் தமிழ்ப்பயன்பாடு குறித்து சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றினர்.

தமிழ் இணைய மாநாடு மூன்று பிரிவுகளாக நடைபெற்றன. முதல் பிரிவில் கணினி வல்லுநர் கலந்து கொள்ளும் கருத்தரங்கம், இரண்டாவது பிரிவில் பொது மக்களுக்குப் பயன்படும் மென்பொருள்கள் இணையம், கணினி குறித்த நூல்கள், கல்விநிறுவனங்கள், வேலைவாய்ப்பு நிறுவனங்கள் கலந்து கொள்ளும் கண்காட்சி அரங்கு மற்றும் மூன்றாவது பிரிவில் பொதுமக்களுக்கும் மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் கணினி, இணையம், கையடக்கக் கருவிகளில் தமிழ்ப்பயன்பாடு குறித்த செயல்முறை விளக்கம் தரும் தன்னார்வத் தொண்டர்கள் நிறைந்த மக்கள் அரங்கம் என்று மூன்று பிரிவுகளாக அமைத்தனர்.

தமிழ் இணைய மாநாடு இதுவரை தமிழ்நாடு, சிங்கப்பூர், மலேசியா, ஜெர்மனி, அமெரிக்கா போன்ற நாடுகளில் பன்னிரண்டு முறை நடந்துள்ளது.

புதுச்சேரியில் முதல் முறையாக இம்மாநாடு நடைப்பெற்றது.

பதிநான்காவது தமிழ் இணைய மாநாடு

உலகத் தமிழ்த்தகவல் தொழில் நுட்ப மன்றம் உத்தமம் சார்பில் மே மாதம் 30 ல் சிங்கப்பூரில் சிம் பல்கலைக்கழகத்தில் இம்மாநாடு நடைப்பெற்றது.

மாநாட்டின் நோக்கம் - விளக்கம்

இந்தியா, சிங்கப்பூர், மலேசியா, கனடா, ஆஸ்திரிலியோ, அமெரிக்கா போன்ற நாடுகளில் வாழும் தமிழ் ஆர்வலர்கள், கணினி தொழில்நுட்ப வல்லுநாகள் இணைந்து உத்தமம் அமைப்பை ஏற்படுத்தினர். இந்த அமைப்பு தமிழ் மொழியை கணினி இணையத்தில் மேம்படுத்தும் வகையில் ஒவ்வொரு ஆண்டும் உலகத்தமிழ் இணைய மாநாட்டை நடத்துகிறது.

இம்மாநாடு ஒவ்வொரு ஆண்டும் இந்தியாவிலும், வெளிநாட்டிலும், மாறி மாறி நடத்தப்படும். சென்ற ஆண்டு புதுச்சேரியில் நடந்தது. இந்த ஆண்டு 14 வது மாநாடு சிங்கப்பூரில் மே 30 முதல் ஜீன் 1 வரை நடந்தது.

இம்மாநாட்டில் மின்னகராதி, மின் நூலகம், மற்றும் கையடக்க மின்படிப்பான்களில் தமிழ் நூல்கள், தமிழ்இணைய வலைப்பூக்கள், விக்கிபீடியா, சமூக இணையங்களில் தமிழ், நுண்ணரிப்பேசி, திறன்பேசி, விண்டோஸ், தமிழ்; குருஞ்செயலிகளை உருவாக்குதல் கணினி இணையவழி தமிழ் கல்வி கற்றல் கற்பித்தல் போன்றவை குறித்து இம்மாநாட்டை நடத்தினர். இம்மாநாட்டில் காந்திகிராமிய பல்கலை தமிழ் துணைப்பேராசிரியர் முனைவர் சி.சிதம்பரம் மற்றும் தமிழகத்தைச் சேர்ந்த 50 பேரும் மற்ற நாடுகளில் இருந்து 150 பேரும் பங்கேற்றனர்.

பதினைந்தாவது தமிழ் இணைய மாநாடு

காந்திகிராமத்தில் உள்ள காந்திகிராம பல்கலைக்கழகத்தில் அடுத்த ஆண்டு நடக்க உள்ளது

மாநாட்டு அரங்கத் தலைப்புகள்

கைபேசிகள் மற்றும் பலகைக் கணினிகளில் முக்கியமாக ஐ.ஓ.எஸ் திறன்பேசியில் தமிழைப் படித்தல், தமிழில் எழுதுதல் முறை.

மின் புத்தகங்கள் மின் இதழ்ல்கள் ஆகியவற்றைக் கைக் கருவிகளில் கொண்டுவர உதவும் செயலிகள் மற்றும் தொழில் நுட்பம்.

திறவூற்றுத் தமிழ் மென்பொருள்கள், தன்மொழியாக்கல்

இயன்மொழிப் பகுப்பாய்வு பிழைதிருத்தி தமிழ் எழுத்துரு பகுப்பி, ஒலி உணர்தல், தேடுபொறிகள், இயந்திர மொழிமாற்றம் தகவல் போன்றவை பற்றி

தமிழ் இணையத்தின் தற்போதைய நிலை வலைப்பதிவு சமூக வலைத்தளங்கள், விக்கிப்பீடியா குரல் வலை போன்றவை

தமிழ் தரவுதளங்கள்

கணினி வழி தமிழ் கற்றல் மற்றும் கற்பித்தல் ஆய்வு

தமிழ்க் கணினி சொல்லாக்க ஆய்வுகள்

கணினி வழி தமிழ்மொழி பகுப்பாய்தல் மற்றும் கணினிக்கு தமிழ் மொழியறிவு ஊட்டல் பற்றிய ஆய்வுகள் இடப்பட்டன.

கணினித்தமிழ்த் துறையில் மிகுதியான மனித வளங்களை உருவாக்கும் சீரிய நோக்கத்தோடு திரு.இராமசாமி நினைவுப் பல்கலைக்கழகத் தமிழ்பேராயத்தின் கணினித்தமிழ்க் கல்வித்துறையும் இந்திய மொழிகளின் நடுவன் நிறுவன மொழித் தரவுத்தொகுப்புச் சேர்த்தியமும் இணைந்து 20.01.2012 முதல் 30.01.2012 வரை 11 நாட்கள் தமிழ்க் கணினி மொழியியல் எனும் பயிலரங்கினை திரு.இராமசாமி நினைவுப் பல்கலைக்கழகக் காட்டாங் குளத்ததூர் வளாகத்தில் நிகழ்தியது.

தொடர்ந்து பதினொரு நாட்கள் நடந்த இப்பயிலரங்கில் மொழி, மொழியியல், மொழித் தொழில் நுட்பம், ஒலியியல், பேச்சொலியியல், பேச்சுத்தொழில், நுட்பம், கணினிப் பொறியியல் எனப்பல்வேறு துறைகளில், தோய்ந்த 29 பேராசிரியர்கள் வல்லுநர்கள் பயிற்சியளித்து கல்லூரி பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், முனைவர் பட்ட ஆய்வாளர்கள் என 108 பேர் பங்கேற்பாளர்களாக தமிழ்நாடு, புதுச்சேரி, கேரளம், ஆந்திரம், டெல்லி, ஆகிய மாநிலங்களிலிருந்தும், இலங்கை, மலேசியா, முதலான நாடுகளிலிருந்தும் கலந்து கொண்டு பயிற்சிபெற்றனர். தமிழ் இணையம் சார்ந்த செய்திகளையும் தமிழ்க்கணிப் பொறிசார்ந்த அறிவையும் எடுத்து விளக்கினர்.

தொகுப்புரை

உலகம் முழுவதும் பல கோடி மக்களின் பயன்பாட்டு தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஒரு கருவி இணையம் என்று கூறலாம்

உலகெங்கும் சிதறிக் கிடைக்கும் தகவல்களை இணையத்தில் சொடுக்கியவுடன் கொட்டும் அருவி என்று கூறலாம்.

இணையத்தைத் தனி மனிதனோ அல்லது குழுவோ கட்டுப்படுத்துவதில்லை. எனினும் இணையத்தினை வழிநடத்த இணையக் கழகம் என்ற ஒன்றை நிறுவி வல்லுநர்கள் நடத்திவருகின்றனர்.

இணையத்தில் இயங்குவதற்கு சில இயங்குதளங்களும் தேவையாகுகின்றன. இணைய முகவரி, இணைய செயல்பாடு, இணைய குறியீடுகள், போன்றவை ஆகும்.

இணையவழிக் கலந்துரையாடல், பொழுதுபோக்குதல் போன்றவைகளுக்கு இணையம் நண்பன என்றும் கருதலாம்.

இணையவழிக் கலந்துரையாடல் என்பது ஏதேனும் ஒரு பொருள் பற்றிய ஆக்கப்பூர்வமான முறையில் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இணையம் வழிக் கூடிப் பேசுவது ஆகும்.

இணையம் வந்த பிறகுதான் தமிழ்த் தகவல்கள் கடல்கடந்து வெளிநாடுகளுக்கு உடனுக்குடன் பரப்புவதற்கு ஒரு பயனாக இணையம் திகழ்கிறது.

தமிழ் இணையத்தை வளர்த்தெடுக்க பல மாநாடுகள் கருத்தரங்குகள், பயிலரங்குகள், வலைப்பதிவர், சந்திப்புகள் நடத்தி தமிழ் இணையத்துக்குப் பல்வேறு அமைப்புகள் உருவாக்கப்பட்டன.

தமிழ் செய்திகளையும் வலைப்பூக்கள் முந்தித் தருகின்றன கட்டற்ற செய்திகளை வெளிப்படுத்தும் தன்னுரிமையை வலைப்பூக்கள் வழங்குவதால் வலைப்பதிவர்கள் பலர் எழுத முன் வந்தனர்.

இணையம் சார்ந்த பல கலைச்சொற்கள் தமிழில் உருவாக்கப்பட்டும் வழக்கத்துக்கு வந்துள்ளனர்.

தமிழ் இணைய வளர்ச்சியின் காரணமாகவும் மொழியின் வளர்ச்சி காரணமாகவும் தமிழ் மென்பொருள் வன்பொருள் போன்ற பல்வேறு காரணங்களின் அடிப்படையாக மாநாடுகள் நடத்தி தமிழில் இணையவளர்ச்சி பெறச் செய்தனர்.

மின்னூல்

மின்னணு புத்தகங்கள் அல்லது மின்னூல்கள் இன்றைய தொழில் நுட்ப உலகில் மிகவும் புகழ்பெற்று மறுவெளியீடு செய்யப்பட்டு வருகின்றன. மேலும் புதிதாக பதிப்பிக்கப்டும், புத்தகங்கள், கட்டுரைகள், அனைத்தும் மின்னூல்களாக காண்கின்றன. மின்னூல் என்பது நூல் ஒன்றினுடைய மின்னணுவியல் அல்லது எண்முறை பதிப்பாகும்.

இன்று அதிக அளவில் பயன்படுத்தும் புத்தகங்கள், தாளில் அச்சிட்டு கட்டுமானம் செய்து தயாரிக்கப்படுகின்றன. அப்புத்தகங்களில் இடம் பெற்றுள்ள செய்திகளைப் போலவே கணினி உதவியுடன் தட்டச்சு செய்து இணையத்தில் இடம் பெறச்செய்து அதை இணைய வழியில் படிக்கும் படியாக மின்புத்தகங்கள் உருவாக்கப்படுகின்றன. இணையத்திலிருந்து இதனைத் தரவிறக்கம் செய்து கணினியில் சேமித்துவைத்து தேவைப்படும் போது படிக்கும் நிலையிலும் மின்நூல் உருவாக்கப்படுகின்றன.

இவ்வாறாக வளர்ந்த மின்னூல் இன்று உலகமொழிகள் அனைத்திலும் சிறப்பான முறையில் உருவாக்கப்பட்டு செயல்படுகின்றன. குறிப்பாகத் தமிழ்மொழியில் இன்று பரவலாக மின்னூல்கள் பயன்பாட்டுக்கு வந்துள்ளது. தனி ஆட்களும், சில தனியார் புத்தக நிறுவனங்களும், பலர்குழுவாகச் சேர்ந்து மின்னூல்களை வடிவமைத்து வெளியிட்டு வருகின்றார்கள்.

மின்புத்தகங்கள்

நாம் இன்று அதிக அளவில் பயன்படுத்தும் புத்தகங்கள் தாளில் அச்சிட்டு கட்டுமானம் செய்து தயாரிக்கப்பட்டு வருகின்றன. அப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள செய்திகளைக் கணினி உதவியுடன் தட்டச்சு செய்து இணையத்தில் அல்லது திறன்பேசியில் வெளியிடுவதே மின் புத்தகம் என்று அழைக்கப்படுகின்றன. இதனைப் பதிவிறக்கம் செய்து குறுந்தட்டு வடிவில் சேமித்து வைப்பதையும் மின்புத்தகங்களாக கருதப்படுகின்றன.

மின்னூல்கள் பல்வேறு அமைப்பில் வெளியிடப்படுகின்றன. அவை பி.டி.எஃப், இணையத்தில் வெளியீடு, புதிய அனைத்துலகத் தரமான இ-பப் மற்றும் முபி, அமைப்புகளில் காணப்படுகின்றன.

மின்னூல் அமைப்பு

- பி.டி.எஃப்
- இணைய அமைப்பு
- இ.பப்
- முபி

அவை நான்கு அமைப்புகளும் கணினி, இணையம் மற்றும் கையடக்க கருவிகளிலும் இயக்கப்படக் கூடிய அமைப்புகள் ஆகும். பி.டி.எஃப், அமைப்பில் உள்ள மின்னூலை வாசிப்பதற்கு பி.டி.எஃப் ரீடர் எனும் வகையிலான வாசிப்பு செயலிகள் தேவையாகிறது. இணைய அமைப்பில் மின்னூலை வாசிப்பதற்கு உலாவி மற்றும் இபப் அமைப்பில் மின்னூலை வாசிப்பதற்கு இபப் ரீடர் என்னும் வாசிப்புச் செயலிகள் தேவையாகின்றன.

பி.டி.எஃப் அமைப்பு

தாளில் அச்சிட்டு வெளியிடுவதற்காக வடிவமைக்கப்பட்ட ஒரு நூலை அச்சுக்கருவியில் அச்சிடுவதற்கு பதிலாக மின்வடிவில் சேமிப்பதே பி.டி.எஃப் அமைப்பாகும். ஊடகத்தில் மாற்றம் உண்டேதவிர நூல் வடிவமைப்பில் மாற்றம் ஏதும் இல்லை. அட்டைப்படம், உள்ளடக்கம், பக்க எண்கள், பின்னூட்டம் முதலிய நூற் கூறுகள் அனைத்தும் அச்சு வடிவ நூலில் எவ்வாறு பதிக்கப்படுகின்றனவோ அவ்வாறு பி.டி.எஃப் நூலிலும் பதிக்கப்படுகின்றன. விரலைக் கொண்டு தாளில் அச்சிடப்பட்டப் பக்கங்களைப் புரட்டுவதற்குப் பதிலாக சுட்டியைக்கொண்டு திரையில் பக்கங்களைப் புரட்டுகின்றனர்.

பி.டி.எஃப் வாசிப்பு கருவியில் தோன்றும் பக்கத்தைப் பெரிதாகவோ சிறிதாகவோ, காணலாம். ஆனால் பக்கத்தின் அமைப்பு அவ்வாறே இருக்கும். எழுத்துக்களைப் பெரிதாக்கலாம் அல்லது சிறிதாக்கலாம். அதற்கேறாற்போல் படங்களின் அளவும் பக்கத்தின் அளவும் மாற்றப்படும். ஆனால் பக்கத்தின் தோற்றம் மாறாது. ஒரு பக்கத்தில் பத்து வரிகளும், இரு படங்களும், இருந்தால் எத்தனை அளவு மாற்றம் செய்தாலும் அதே பக்கத்தில் தோன்றும் அடுத்தபக்கத்தில் உள்ள வரிகள் இந்தப் பக்கத்தில் வராது. அது போல அந்த பக்கத்தில் உள்ள வரிகள் அடுத்தப் பக்கத்திற்குப் போகாது.

பி.டி.எஃப் மின்னூல்களை உருவாக்குவது மிகவும் எளிதாகும். அச்சிடுவதற்கான நூலை வடிவமைக்கும் அதே செயலில் இருந்து பி.டி.எஃப் மின்னூல்களைச் சேமிக்கலாம். மைக்ரோசாப்ட், அடோபிஇன்டிசைன், முதலிய செயலிகள் பொருத்தமானவை. கோப்புகளை பி.டி.எஃப், ஆக சேமிப்பதற்கு பி.டி.எஃப் ரைடர் என்னும் செயலி தேவை. இவ்வகை செயலிகள் இலவசமாக கிடைக்கின்றன.

பி.டி.எஃப் அமைப்பில் சேமிக்கப்பட்ட மின்னூலில் ஒரு சில வசதிகளை மட்டுமே சேர்க்கலாம் அடோபி அக்ரோபட் போன்ற செயலிகளைக் கொண்டு உள்ளடக்கம் பக்கத்தில் உள்ள தலைப்புகளை நூலில் உள்ள பக்கங்களோடு இணைக்கலாம்.

இதுபோன்று சிறுசிறு முன்னேற்றங்களைத் தவிர பி.டி.எஃப் மின்னூல்களில் வேறு எந்த புதுமையையும் செய்ய முடியாது. இதுவே பி.டி.எஃப் அமைப்பு முறை என்று குறிப்பிடுகின்றனர்.

## இணைய அமைப்பு

இணைய அமைப்பில் உருவாக்கப்படும் மின்னூல் மீயுரை குறியீட்டு மொழியில் வடிவமைக்கப்பட்ட நூலாகும். ஓர் இணையதள உருவாக்கத்திற்குப் பயன்படும் அதே தொழில் நூட்பங்களைக் கொண்டே இந்த வகை மின்னூல்களும் உருவாக்கப்படுகின்றன. இணையத்தில் தமிழ் மின்னூல்களைப் பதிவேற்றும் திட்டங்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கப்பட்டன. மதுரைத் திட்டம், நூலகம் திட்டம், சென்னை நூலகம் திட்டம், முதலியவை நூற்றுக்கணக்கான தமிழ் நூல்களை இணையத்தில் பதிப்பித்து வருகின்றன. கட்டற்ற கலைக்களஞ்சியமான விக்கிபீடியா ஒரு பெரிய மின்னூல் களஞ்சியமாகக் கருதலாம்.

இணையத் தொழில்நுட்பம் என்பதால் எந்தவிதக் கணினிகளிலும் இந்த மின்னூல்களை வாசிக்கலாம். ஒருங்குறி எழுத்துரு தரத்திலான தமிழ் எழுத்துரு மற்றும் உலாவி இருந்தாலே போதும், விண்டோஸ், லினக்ஸ், கணினிகளில் இந்த இரண்டும் உள்ளன. தமிழ் மின்னூல்களைப் படிக்கும் வாய்ப்பு இந்தக் கணினிகளில் இயல்பாகவே உள்ளது.

சி.எஸ்.எஸ். மற்றும் ஜாவாஸ்க்ரிப்ட், ஆகிய கணினி மொழிகளின் துணைக்கொண்டு நூலோடு வாசகர்கள் ஊடாடுவதற்கான வசதிகளைச் சேர்க்கலாம். தாளில் அச்சிடப்பட்ட புத்தகத்தை புரட்டுவதைப் போன்ற உணர்வு, படங்களையும், எழுத்து வரிகளையும், ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்கு நகர்த்துதல், அருஞ்சொற்களைத் தேர்வுசெய்து அவற்றிற்கான பொருளை இன்னோரு கட்டத்தில் காணுதல், குறிப்பிட்ட சொற்கள் வரும் பக்கங்களைத் தேடுதல் முதலிய பல வசதிகளை இணைய அமைப்பிலான மின்னூல்களில் சேர்க்கலாம்.

இணைய அமைப்பிலான மின்னூல்களில் பல புதுமைகளைச் செய்வதற்கன வாய்பு இருந்தாலும் சில

குறைகள் உள்ளன. பி.டி.எஃப் நூலில் எல்லா பக்கங்களும் ஒரே கோப்பில் அடங்குவதுபோல் இணைய அமைப்பிலான நூலில் உள்ள பக்கங்கள் அடங்குவதில்லை. இந்த நூலில் பயன்படுத்தப்படும் படங்கள் தனித்தனியே வெவ்வேறு கோப்புகளில் சேமிக்கப்படுகின்றன. நகர்படங்கள் ஒலிப்பதிவுகள் அனைத்தும் தனித்தனி கோப்புகளில் சேமிக்கப்பட வேண்டும். இணையத் தொடர்பு இல்லாத போது இந்த நூலை வாசிப்பதாக இருந்தால் இந்த நூலுக்குத் தேவைப்படும் அனைத்துக் கோப்புகளும் கணினியில் பதிவிறக்கம் செய்யப்பட வேண்டும்.

இணைய அமைப்பில் இது போன்று குறைகளைத் தீர்ப்பதற்காகவும் மின்னூலுக்கென்றே சில சிறப்பு அம்சங்களைச் சேர்ப்பதற்காகவும் உருவாக்கப்பட்டதுதான் இபப் எனும் புதிய மின்னூல் தரம் ஆகும்.

## இபப் அமைப்பு

இபப் என்பது நவீன மின்னூல்களை வெளியீடுவதற்காக அனைத்துலக மின்பதிப்புக் குழுமத்தால் உருவாக்கப்பட்ட ஓர் இலவச கட்டற்ற திறந்தவெளி மின்தரம் என்று குறிப்பிடுகின்றனர்.

இணைய அமைப்பில் இருக்கும் அனைத்து வசதிகளையும் பயன்படுத்தி மின்னூலுக்கென்றே சில புதிய வசதிகளைச் சேர்த்து ஒரே கோப்பில் பதிக்கும் வாய்ப்பை இந்த இபப் அமைப்பு அமைந்துள்ளது.

மின்னூல்களை கணினிகளில் மட்டும் இன்றி கையடக்க கருவிகளிலும் வாசிகும் வாய்ப்பை இபப் ஏற்படுத்தியுள்ளது. மின்னூல்களை வாசிப்பதற்காகவே சில கருவிகள் சிறப்காகத் தயாரிக்கப்பட்டுள்ளன.

முபி அமைப்பு

முபி அமைப்பானது இபப் போன்றதே ஆகும். ஆனால் திறந்த நிலைக் கோப்பு அல்லாமல் அமேசான் நிறுவனத்தின் கிண்டில் கருவியில் மட்டும் படிக்கமுடியும் இதனை நாம் முபி அமைப்பு என்கிறோம்.

மேற்குறிப்பிட்ட எல்லா அமைப்புகளிலும் தமிழ் மின்னூல்களைத் தயாரிக்கலாம். வின்டோஸ், மெகிண்டஷ், லினக்ஸ், போன்ற கணினிகளில் தமிழ் ஒருங்குறி எழுத்துருக்கள் இயல்பாக இருப்பதால் அனைத்து கணினிகளிலும் இந்த நூல்களைப் படிக்கும் வாய்ப்பு உள்ளது. ஆனால், எல்லா கணினிகளிலும் அதே எழுத்துரு அமைந்திருக்கும் என்பதறகு உத்தரவாதம் கிடையாது. எல்லா கணினிகளிலும் நூலை படிக்கும் வாய்ப்பு மட்டும் இருக்கின்றன. ஒவ்வொரு அமைப்பில் உள்ள எழுத்துருவை கொண்டு கோப்புகள் தோன்றும்.

மின்னூலை உருவாக்கும் முறை

நாம் வெளியிட விரும்பும் ஆழ்ந்த உட்பொதிந்த கருத்துக்கள் அடங்கிய பொருட்கூறுகளை அல்லது பகுதிகளைக் கணினி தமிழ் எழுத்துக்களைப் பயன்படுத்தி தட்டச்சு செய்து கொள்ள வேண்டும். தட்டச்சு செய்து கொண்ட பகுதிகளை ஒரு கோப்பாகச் சேமித்து வைக்க வேண்டும். நாம் தட்டச்சு செய்து கொண்ட கோப்பு எந்த மென்பொருளின் மூலம் இணையத்தில் பயன்படுத்தித் தயார் செய்தோமோ அந்த மென்பொருளின் மூலம் இணையத்தில் பயன்படுத்தும் வகையில் **Html – Asp** கோப்புகளாகப் பதிவேற்றம் செய்ய வேண்டும். இணையத்தில் உள்ள அனைத்துத் தகவல்களும் இரண்டு வகை கோப்புகளாகவே வடிவமைக்கப்பட்டு வருகின்றன. அவை **Html – Asp** முதலில் குறிப்பிட்ட வகை கோப்பு நாம் அவ்வாறு தயார் செய்து ஏற்றுமதி செய்யமுடியும். நாம் தயார் செய்து ஏற்றுமதி செய்த கோப்புகள் இணையத்தின் சேமிப்புகிடங்கில் சென்று தேங்கி கிடைக்கும். பிறகு நாம் அந்தக் கோப்பை பயன்படுத்த முயற்சிக்கும்போது சேமிப்புக் கிடங்கில் உள்ள அந்தக் குறிப்பிட்ட கோப்பு செயல்படும் பக்கங்களாக மாறி கண்முன்னே தோன்றும். ஒவ்வொரு நாளும் ஏற்றுமதி செய்யப்படும் கோப்புகள் இணைய சேமிப்புக் கிடங்கில் ஆவணமாக பாதுகாக்கப்படும். இவ்வாறு வெளியிடப்படும் மின் புத்தகங்களை இணையத்தின் உதவியோடு மென்தட்டுகள் மூலம் பதிவிறக்கம் செய்து பயன்படுத்த முடியும். இவ்வாறு இணைய சேமிப்புக் கிடங்கை முறையாகப் பராமரிக்க வேண்டும். குறிப்பிட்ட இணைப் பக்கத்திற்கு ஒதுக்கிய இடத்தை ஒவ்வொரு ஆண்டும் ஒரு குறிப்பிட்ட தொகை செலுத்தி புதிப்பித்துக் கொள்ள வேண்டும். இல்லையேல் நாம் வெளியிட்ட மின் புத்தகங்கள் காலாவதியாகிவிடும்.

கிரியேடிவ் காமன்ஸ் உரிமம் மூலம் உள்ளடக்கத்தை காணுதல்

கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமம் மூலம் தமிழில் பல வலைப்பதிவுகளும், தளங்களும் உள்ளன. நாம் அங்கிருந்து உள்ளடக்கத்தைப் பெற மற்றும் மின் புத்தகங்களும் அவர்கள் புத்தகங்களில் அதே உரிமம் மூலம் குறிப்பிட்டு உருவாக்கமுடியும். பல எழுத்தாளர்களும், பல வலைப்பின்னர்களும் கிரியேட்டிவ் காமன்ஸ் மூலமாக தங்களுடைய வலைப்பதிவில் வெளியிடுவார்கள்.

**Press book.com** என்ற வலைதளத்தில் ஒரு கணக்கை உருவாக்க.

**Press book.com** என்ற மென்பொருளைப் பயன்படுத்தி மின்னூலை உருவாக்க முடியும். **epub, html, pdf** போன்ற முறையில் மின்னூல்கள் அமைகின்றன. **Press book.com** என்ற வலைதளதில் ஒரு கணக்கை உருவாக்கி, இக்கணக்கில் நமக்குத் தேவையான மின்னூல்களையும், புகைப்படங்களையும், மற்றும் ஒலி, ஒளி, ஊடகங்களையும் தேவைக்கேற்ப நிருவிக்கொள்ளலாம். புதிதாக ஒரு மின்புத்தகத்தை உருவாக்கும் பொழுது எண் அட்டவணையை பயன்படுத்தி அவ்வாறு உருவாக்கிய புத்தகத்தின் வலை முகவரி மற்றும் புத்தகத்தின் தலைப்பு குறிப்பிட்டு பிறகு அதனை நாம் வெளியிடும் முறை தனியுரிமையாகவும் பொதுவாகவும் வெளியிடலாம்.

புத்தகத்தின் வடிவமைப்பு

- அட்டைப் படம்
- முக்கிய பகுதி
- அட்டை பின் பகுதி

அட்டைப்படம் **( Front Matter)**

அட்டைப்படம் என்பது ஒரு புத்தகத்தின் முதல் பகுதியாகவும் மற்றும் நூல் விவரம், தலைப்பு, அணிந்துரை, முகவுரை, பதிப்புரை ஆகியவை குறிப்பிடுவது அட்டைப்படமாகும்.

முக்கியப் பகுதி **(Main body)**

ஒரு புத்தகத்தின் பொருளடக்கத்தையே முக்கியப் பகுதியாக குறிப்பிடுகின்றனர். ஒரு புத்தகத்தை உருவாக்கியப் பிறகு ஏற்றுமதி சேர்க்கை மற்றும் ஏற்றுமதி தலைப்புக் காட்டும் சேர்க்கை என ஒவ்வொரு இயலுக்கும் அல்லது கட்டுரைகளுக்கும் இம்முறை பயன்படுத்திய பிறகு வெளியிடலாம்.

புத்தக தகவல் **(Book information)**

ஒரு புத்தகத்தின் முழு விவரத்தையும் குறிப்பிடுவது புத்தக தகவல் ஆகும். தலைப்பு, குறுகிய தலைப்பு, துணைத் தலைப்பு, குறிப்பிட்டப்பிறகு அப்புத்தகத்தின் ஆசிரியர் பெயர், ஆசிரியரின் முழு முகவரியும், வெளியிடப்படும் இடம், மொழி, வருடம், ஆகியவை அனைத்தும் பதிவு செய்யவேண்டும்.

கருப்பொருள் **; (Themes)**

கருப்பொருள் என்பது வரியின் மற்றும் ஒரு பத்தியின் இடைவெளி விட்டு அமைப்பது கருப்பொருள் ஆகும்.

ஏற்றுமதி **(Export)**

ஏற்றுமதி என்பது நாம் உருவாக்கிய ஒரு மின் புத்தகத்தை வடிவமைக்கும் அல்லது அமைப்புகள் ஆகும். **pdf, epub, mobi, hpub, html, word, press, xml** போன்ற வடிவங்களில் மின் புத்தகத்தை ஏற்றுமதி செய்யலாம்.

**Press book.com** என்ற வலைத்தளத்தில் உருவாக்கிய உங்கள் கணக்கில் உள்ள கருவிகளை பயன்படுத்தி மின் புத்தகத்தை உருவாக்கமுடிம். அக்கருவிகள், கட்டுப்பாட்டுஅறை, மேம்படுத்தல், உரை, புத்தகத்தகவல், தோற்றம், ஏற்றுமதி, விற்பனை, ஊடகம், பயனர்கள் மற்றும் சுருக்கப்பட்டியல் ஆகியவை ஆகும்.

அட்டையின்பின் பகுதி **(Back Matter)**

அட்டையின் பின்பகுதி என்பது அப்புத்தகத்தின் பதிப்புரிமை பற்றிய தகவல்களும், ஆசிரியர் பற்றிய தகவல்களும், கவிதைகளும், படங்களும், நூல்களும், விருதுகளும், அட்டவனைகளும், மற்றும் இது போன்ற பல கருத்துகளை வெளியிடுவது அட்டையின் பின் பகுதி ஆகும்.

மின்னூலை உருவாக்கும் போது ஏற்படும் சிக்கல்கள்

இணையப் பயன்பாட்டில் இரண்டாவது இடத்தைப் பிடித்துள்ள தமிழ்மொழியில் பல்வேறு வகையான எழுத்துருக்கள் உள்ளன. ஒவ்வொரு இணைய தளமும் ஒவ்வொரு தமிழ் எழுத்துருக்கள் கொண்டு அமைந்துள்ளது. எனவே நாம் வெளியிடும் இணையதளத்தில் உள்ள எழுத்துருக்களைக் கொண்டே நமது நூல் உள்ளடக்கங்களைக் கணினியில் தட்டச்சு செய்ய வேண்டும். இல்லையேல் நமது நூற்பகுதிகள் இணையப் பக்கத்தில் இருந்து தாறுமாறாக மாறிவிடும். ஆங்கில மொழியில் இந்தச் சிக்கல் இல்லை. எந்த வகை ஆங்கில எழுத்துருக்களைக் கொண்டு மின்நூல் தயாரித்தாலும் அவை இணைப்பக்கங்களாக ஏற்றுமதி செய்யும் போது தெளிவாகத் தெரிகிறது.

## சிக்கல் ஏற்படுவதற்கான காரணம்

ஆங்கில மொழியில் அமைந்த விசைப்பலகைகள் ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்டவை ஆகும். ஒவ்வொரு வகை ஆங்கில எழுத்துருக்களும் மற்ற வகை எழுத்துருக்களும் இணைந்து கொள்ளும் வகையில் ஒன்றை ஒன்று சார்ந்தும் ஒன்றையொன்று துணை செய்வதுமாக வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆனால் தமிழ் மொழியின் எழுத்துருக்கள் பல விதமான விசைப்பலகைகள் கொண்டு வடிவமைத்துள்ளதால் தமிழில் மின்னூல்கள் தயாரிப்பதில் சிக்கல் ஏற்படுகின்றன.

தீர்வு

தமிழ் மொழியின் எழுத்துருக்களின் சிக்கலைத் தவிர்ப்பதற்கு ஒருங்குறி **(Unicode, NHM Writer)** என்ற எழுத்துருக்கள் பெருமளவில் பயன்படுத்தப் படுவதால் அச்சிக்கலில் இருந்து விடுபட்டது..

மின்னூல் வரலாறு

மின்னூல் முதன்முதலாக ஆக்ஸ்போர்டு ஆங்கில விளக்க உரையுடன் இலக்கணப்படி அச்சு வடிவிலான நூலாக வெளிவந்திருக்கிறது.

“முதல் மின் புத்தகம் குறீயீட்டு 1940 ஆம் ஆண்டுக்குப் பிறகு தொடங்கி ராபர்டோஸ்வீடிஷ் தயாரித்த தாமஸ்அக்வினாஸ் படைப்புகளைப் பெரிதும் உரைவிளக்கம் மின்னணு குறியீட்டாக இருக்கின்றன”1

ஆங்கிலத்தில் முதன் முதலாக மின் நூலை வெளியிட்டவர் தாமஸ்அக்யூனஸ், ராபட்பூசா, பாப்ரோன் என்பவர்கள் மிக முக்கியமானவர்கள் ஆவார். 1930 ல் மின்னூல்களை அடுத்தவர்கள் படிக்கின்ற வகையில் படத்துடன் கூடிய ஒளி நகர்வுடன் வெளியிட்டுள்ளனர்

இதற்கு மாற்றாக டவ்ஏங்கல்பர்ட் என்ற வரலாற்று ஆசிரியர் 1960 ல் nஉள ஆய்வுத்திட்டத்தில் நூல்களை வெளியிட்டுள்ளார். இதனைத் தொடர்ந்து 1992 ல் சோனி நிறுவனம் டேட்டா டிஸ்க்மென் என்பதை அறிமுகப்படுத்தியது. இது வன்பொருளில் சேமிக்கும் வசதியைப் பெற்றது.

மின்புத்தகங்களை வாசிக்க உதவும் கருவிகள்

தமிழில் மின்புத்தகங்களை வாசிப்பதற்கான கணினி தொழில் நூட்ப வல்லூனர்கள் மற்றும் பல அம்சங்கள் கொண்ட பெரிய நிறுவனங்களாலும் பல கருவிகள் கொண்டு வரப்பட்டுள்ளன. அக்கருவிகளைப் பயன்படுத்தி மின்னூலை வாசிக்கலாம்.

மின்னூலை வாசிப்பதற்கென்று வன்பொருளும், மென்பொருளும், உருவாக்கப்பட்டுள்ளன. அவ்வன்பொருள்களிலும், மென் பொருள்களிலும் மின்னூலை வாசிக்கும் போது பக்கத்தைப் பெரிதாகவும் சிறியதாகவும் மாற்றமுடியும். நாம் விட்ட இடத்தில் இருந்து தொடங்கவும் முடியும் இது போன்று பல முறைகளைக் கொண்டு உள்ள கருவிகளாகவும், மென்பொருளாகவும், உள்ளன.

“மின்னூல் என்பது நூல்களின் மென்வடிவம்

மட்டுமில்லை, அதனை எளிதில் படிப்பதற்கும், எடுத்துச் செல்வதற்கும், காகிதமில்லை மின்வழியாகும்”2 கணினியிலும் அனைத்து இயக்குதலக் கருவிகளிலும் நூல்களை விட்ட இடத்தில் இருந்து தொடர்ந்து படிக்கும் முறையுள்ளது.

மின்னூலைப் படிப்பதற்கென்று கையில் வைத்துக்கொள்ளக்கூடிய அளவிற்கு பல கருவிகள் வளர்ந்துள்ளது. அவை !

வன்பொருளாகவும், மென்பொருளாகவும், உள்ளன.

வன்பொருள்கள்

- **Kindle**
- **Nook**
- **Sony**
- **kobo**
- **Android**
- **I phone**
- **Computer**

மென்பொருள்

- ○ **Google play books**
  - **News Reader**
  - **Reader pdf Reader**
  - **Speed Reader**
  - **Books Reader**
  - **Readuim – Chorme**
  - **e – Reader**
  - **FB – Reader**

**Iso** கருவிகள் - **I Books for ipad (epub), kindle for ipad (mobi), Google play books.**

**Android** கருவிகள் - **epub for Android, Fb Reader for Android, Google play books**

**Google Chrome** குரோம் உலாவி – **Readium.org** போன்ற பல கோப்புகளைப் படிக்கலாம்.

**Mozilla Firefox** மோசிலா பயர்பாக்சு உலாவி – **epubread.com** தரும் நீட்சியில் **epub** கோப்புகளைப் படிக்கலாம்.

**FBreader, Calibre,** %yk; **Windows, Linux** முதலிய பல்வேறு இயங்குதளங்களிளும் மின்னூல்களைப் படிக்க முடியும்.

இக்கருவிகளில் மின்னூலை நிறுவி விலையில்லா கருவிகள் மூலம் விண்டோஸ், ஐபேட், ஐபோன், ஆன்ராய்டு, பிளாக்பெரி, என பல கருவிகளில் நிறுவி படிக்கலாம்.

தமிழ் மின்னூல்கள்

தமிழ் மின்னூல் வளர்ந்து இன்று உலக மொழிகள் அனைத்திலும் சிறப்பான முறையில் உருவாக்கப்பட்டு செயல்படுகின்றன. குறிப்பாகத் தமிழ் மொழியில் இன்று பரவலாக மின்னூல்கள் பயன்பாட்டுக்கு வந்துள்ளன. தனி ஆட்களும் சில தனியார் புத்தக நிறுவனங்களும், பலர் குழுவாகச் சேர்ந்து மின்னூல்களை வடிவமைத்து வெளியிட்டு வருகின்றனர்.

தற்போது பிளாஷ் என்ற மென்பொருளைப் பயன்படுத்தி தமிழ் மொழியில் அமைந்த எந்த ஒரு கோப்பையும் மின் புத்தகமாக எளிதில் மாற்ற முடிகிறது. இதன் மூலம் அமைந்த மின்னூலை எளிதில் படிக்க முடிகிறது. அதிகமான பக்கங்களையும், படங்களையும், இணைக்கும் வாய்ப்பு உள்ளது.

"தமிழில் மின்னூல்கள் எப்பொழுது எந்த ஆண்டு முதன் முதலில் தோன்றியது என்று வரலாறு கிடைக்கவில்லை. ஆனால் 27 ஆகஸ்டு 2001 தமிழ்மரபு அறக்கட்டளை மின்னூலை வெளியிட்டுள்ளது."3

"தமிழில் 2003 ல் முதல்வன் என்ற பெயரில் மின்நூல் ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. வெளியிட்டவர் முனைவர் சி.சிதம்பரம். காந்திகிராம கிராமியப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகின்றார்."4 இதனை தொடர்ந்து பல ஆசிரியர்கள் முயர்ச்சி செய்து தமிழில் பல மின்னூல்களையும் வெளியிட்டு வருகின்றனர்.

மின்னூல்களின் பயன்பாடுகள்

அதிக பக்கங்கள் கொண்ட நூல் பகுதிகளைக் கையடக்க வடிவில் சுருக்கிவிடமுடியும். எளிதில் எங்கும் எடுத்துச் சென்று பயன்படுத்த முடியும்.

கட்டுமான நூல்களில் வண்ணப் புகைப்படங்களைக் கொண்டு அதிக பக்கங்களை இணைக்க முடியாது. அதிகப் பொருட்செலவு ஏற்பட வாய்ப்புள்ளது. ஆனால் மின் நூல்களில் அதிக அளவில் வண்ணப் புகைப்படங்களை இணைத்து வெளியிடலாம்.

மின் நூல்களில் உள்ள பக்கங்களைத் தேவைக்கேற்ப பெரிதாக்கிப் பயன்படுத்த முடியும். சாதாரண நூல்களை இவ்வாறு பயன்படுத்த முடியாது.

உலகின் எப்பகுதியிலும் எந்த நேரத்திலும் தேவையான பகுதிகளை இணையத்தில் தேடுபொறிகளைக் கொண்டு எளிதாக தேடிப் பார்த்து பயன்படுத்த முடியும்.

தேவையான மின்னூல்களை மின்வணிகம் வழியாக வாங்கிப் பயன்படுத்த முடியும்.

அச்சிடப்பட்ட நூல்களை அச்சுப் பிரதிகளை வாங்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட வாய்ப்புள்ளது. ஆனால் மின் புத்தகங்களைத் தேவையான நேரங்களில் உடனே தரவிறக்கம் செய்து கொள்ள முடியும்.

மின் புத்தகங்களில் உள்ள தகவல்களை ஆவணமாக நீண்ட காலம் பயன்படுத்த முடியும். அச்சிடப்பட்ட நூல்கள் குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு சிதைந்து விடுகின்றன. ஆனால் மின் புத்தகங்களின் ஆயுள் காலம் பன்மடங்கு நீடிக்கக்கூடியவை ஆகும்.

வெளியிடப்பட்ட ஒரு புத்தகத்தின் கருத்துக்கள் ஒரு மாநிலமோ, அல்லது ஒரு நாடோ மட்டும் தான் சென்றடையும்.

மின்னூலாக பதிப்புச் செய்யும் போது உலகளாவிய நிலையில் பரவி எல்லோரும் படித்து இன்புறும் அளவிற்கு மின்னூல்கள் பயன்படுகின்றன.

மின் நூலகம்

21 ஆம் நூற்றாண்டின் இணையற்ற அறிவியல் சாதனமாகக் கணினியில் நூல்களைப் பதிவு செய்து பாதுகாக்கும் பணி உலகெங்கிலும் எல்லா மொழிகளிலும் வெகு வேகமாக நடைபெற்று வருகிறது.

தமிழ் மொழி இலக்கியம், இலக்கணம், உள்ளிட்ட நூல்களைக் கணினியில் சேமித்து வைக்கும் வேலை அரசாலும், அரசு சார்புடைய அமைப்புகளாலும், தனியார் பலரின் ஆர்வத்தாலும் நடைபெற்று வருகிறது.

சென்னையில் உள்ள தமிழ் இணையப் பல்கலைக்கழகமும் பெரும்பங்காற்றியுள்ளது. சென்னை பல்கலைக்கழகமும் மைசூரில் உள்ள இந்திய மொழிகளின் நடுவண் அரசு நிறுவனமும் தமிழ் நூல்களைக் கணினியில் சேமிக்கும் வேலையைத் தொடங்கி வருகின்றனர்.

கே.கல்யாணசுந்தரம் என்பவர் தமிழ் நூல்களைக் கணினியில் சேமிக்கும் வேலையை 1988 ஆம் ஆண்டு தொடங்கினார். இது தமிழ் நூல்களைக் கணினியில் சேமிக்கும் முதல் பணியாகக் கருதப்படுகிறது. இவர் தொடங்கிய திட்டத்திற்கு மதுரைத் திட்டம் என்று பெயர் வந்தது.

நூலக திட்டங்களை அமைத்து அனைத்து நூலகங்களிலும் மின்னூல் பணியை ஆரம்பித்தனர். இதுவே நூலக திட்டம் என்று குறிப்பிடுகின்றார்.

தமிழக அரசாங்கம் தமிழகத்தில் உள்ள கன்னிமார நூலகம் தேவநேயப் பாவாணர் நூலகம், தஞ்சையில் உள்ள சரஸ்வதி மகால் நூலகம், தமிழ் பல்கலைக்கழக நூலகம், கும்பகோணத்தில் உள்ள அரசினர் கலைக் கல்லூரி நூலகம், போன்ற புகழ் மிக்கதும் பழமையானதுமான நூலகங்களைக் கணினிமயமாக்கி பாதுகாத்து வருகிறது.

மேற்கூறிய பணிகளில் சில நூல்களை முழுவதுமாக படிக்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. சில நூல்களின் பட்டியலைப் பார்வையிடும் வகையில்

அமைந்து காணப்படுகின்றன.

இங்ஙனம் தமிழ் நூல்களைக் கணினியில் சேமித்து இணையப் பயன்பாட்டின் மூலமாக எவரும் எங்கிருந்தும் பார்க்கும் வகையில் நூலகமாக அமைத்திடும் முறையையே மின் நூலகம் என்று குறிப்பிடப்படுகின்றன.

மின் நூலகங்கள்

எண்ணிம நூலகம்

**(Digital Library)**

தமிழ் இணையப் பல்கலைக்கழகம் மின் நூலகம்

**(Tamil Virtual University E – Library)**

ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்

**(Roja Muthiah Resarch Library)**

சென்னை மின் நூலகம்

**(Chinnai Library)**

நூலகம்.நெட்

**(Noolaham.net)**

இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்

**(Central Institute of Indian Languages – (CIIL)**

உலகளாவிய தமிழர்கள் இணையம்வழி ஒன்று கூடி தமிழ் இலக்கியங்களின் மின்பதிப்புக்களை உருவாக்கி அவற்றை இணையம் வழி உலகெங்கிலும் உள்ள தமிழர்களும் தமிழார்வலர்களும் இலவசமாக பெற வசதிசெய்யப் பெற்றுள்ளன.

ஒரு சமூகத்திற்கு இலக்கியங்கள்தான் கலாசாரத்திற்கான ஒரு முக்கிய எடுத்துக்காட்டு ஆகும். உலகளாவிய தமிழர்களுக்கும் ஏனையோருக்கும் பகிர்ந்துகொண்டு பின் வரும் சந்ததியினருக்கு கொண்டுச் செல்வதும் ஒவ்வொரு தமிழரின் கடமை ஆகும்.

மதுரைத் திட்டம் எந்தவித அரசாங்கம் அல்லது தனியார் நிறுவன உதவியின்றி, வியபார நோக்க மின்றியும் நடைபெறுகின்ற ஒரு தன்னார்வ முயற்சி ஆகும். 1998 ஆம் ஆண்டு தமிழர் பொங்கல் திருநாள் அன்று ஆரம்பிக்கப்பட்ட இத்திட்டம் இன்றும் தொடர்ந்து இயங்க வருகின்றது. உலகில் வெவ்வேறு நாடுகளில் வசிக்கும் முன்னூற்றுக்கு மேற்பட்ட தமிழர்களும் தமிழார்வலர்களுக்கும் ஒன்றுகூடி இத்திட்டத்தை நடத்தி வருகின்றனர்.

மதுரைத் திட்டம் உலகில் பல நாடுகளில் வசித்து வரும் தமிழர்கள் அவரவர் தங்களது வீடுகளில் கணினியைக் கொண்டு கிடைக்கும் நேரங்களில் தமிழ் இலக்கியங்களை கணினியில் உள்ளிட்ட பிழை திருத்தி மின்பதிப்புகளாக தயாரிக்கும் ஒரு கூட்டு முயற்சியில் ஈடுப்பட்டுள்ளனர்.

தமிழ் இலக்கியங்களை மின்வழி பாதுகாத்து மற்றவர்களுடன் இலவசமாக பகிர்ந்து கொள்வதில் பங்கு பெறச்செயகின்றனர்.

மதுரைத் திட்டத்தின் மின்பதிப்புகள் ஆரம்ப காலத்தில் இணைமதி, மயிலை, தமிழ் எழுத்துக்கள் கொண்டு தயாரிக்கப்பட்டது. ஆனால் 1999 ஆம் ஆண்டிலிருந்து இணையம் வழி தமிழ் தகவல் தொழில்நுட்ப பரிமாற்றதிற்கான இணையம் வழி தீர்மானிக்கப்பட்ட

தமிழ் தகுதர வடிவம் கொண்டு தயாரித்து மின்பதிப்புகள் வெளியிட்டு வருகின்றது. 2003 ஆம் ஆண்டில் இருந்து பல்மொழி ஒருங்குக் குறியீடு முறை தயாரிக்கப்பட்ட மின்பதிப்புகளையும் வெளியிட்டு வருகின்றனர்.

தமிழ் இலக்கியங்களின் வரலாறு மிக பழமையானது. முதற்சங்க கால நூல்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இயற்றப்பட்டது என்பது வல்லுனர்கள் கருத்து.

மதுரைத் திட்டம் காலம், சமயம், தேசப்பிரிவு, இலக்கியப்பிரிவு போன்ற எவ்வித பாகுபாடுமின்றி எல்லாவிதமான தமிழ் நூல்களின் மின்பதிப்புகளை வெளியிட்டு வருகின்றது. தொன்று தொட்டு சங்ககால நூல்கள் முதல் தற்கால தமிழ்நூல்கள் வரை அனைத்தும் வெளியிடப் படுகிறது. ஒரேஒரு கட்டுப்பாடு புத்தக வடிவில் வெளியான நூல்கள் காப்புரிமைகளுக்கு மரியாதை கொடுத்து கண்ணியமாக நடப்பது ஆகும். காப்புரிமை இல்லா எல்லா நூல்களையும் மின்பதிப்பில் வெளியிடலாம்.

உலக மின்னூலகம்

உலக மின்னூலகம் என்பது யுனெஸ்கோ மற்றும் அமெரிக்க காங்கிரசு நூலகம் ஆகியவற்றால் நடத்தப்படும் ஒரு பன்னாட்டு மின்னூலகம் ஆகும். அனைத்துலக மற்றும் பல்வேறு கலாசாரப் புரிதல்களை ஊக்குவித்தல், இணையத்தில் கிடைக்கும் கலாசார உள்ளடக்கங்கள் அளவிலும், வகையிலும், அதிகமாக்குதல், கல்வியாளர்கள், ஆய்வாளர்கள், பொதுமக்கள், ஆகியோருக்கு அறிவுசார் வளங்களை அளித்தல், பங்குதாரராக உள்ள நிறுவனங்களில் அறிவுசார் வளங்களை அதிகரித்தல் அதன் மூலம் பல்வேறு நாடுகளுக்கு இடையே உள்ள இடைவெளியைக் குறைத்தல் ஆகியவற்றை தனது நோக்கமாக உலக மின்னூலகம் கொண்டுள்ளது.

உலகெங்கிலும் உள்ள கலாசாரங்களின் முதன்மைத் தகவல் ஆதாரங்களான வரைப்படங்கள் அரிய நூல்கள் இசைக் கோர்வைகள் திரைப்படங்கள், அச்சுவடிவங்கள், ஒளிப்படங்கள், வடிவியல், வரைபடங்கள், ஆவணங்கள் உள்ளிட்டவற்றை இலவசமாக இணையத்தில் கிடைக்கச் செய்வதில் முனைப்புடன் செயல்படுகிறது.

உலக மின்னூலகம் துவங்கப்பட்ட போது அரபி, சீனம், ஆங்கிலம், பிரஞ்சு, போர்ச்சுகிசு, ரஷ்யன், ஆகிய மொழிகளில் கிடைத்த 1170 உருப்படிகளைக் கொண்டிருந்தது.

வரலாறு

ஏறக்குறைய 20 ஆண்டுகளுக்குப் பிறகு 2003 ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகள் கல்வி அறிவியல் மற்றும் கலாசார அமைப்புக்கான யுனெஸ்கோ தனது நிலையான பிரதிநிதிக் குழுவை ஐக்கிய அமெரிக்கா மீள அமைத்தது. அமெரிக்க நாடாளுமன்றமான காங்கிரசின் நூலகர் முனைவர் ஜேம்சு.எச்.பில்லிங்டன், அந்நாட்டின் ஆணையாளராக யுனெஸ்கோவில் நியமிக்கப்பட்டார்.

“ஜூன் 2005 ஆம் ஆண்டு யுனெஸ்கோ துவக்க நாள் கருத்தரங்கில் அழைப்பின் பேரில் சென்று உலக மின்னூலகம் ஒரு பார்வை என்ற தலைப்பில் உரையாற்றினார்.”5 அப்போது நிறுவனங்கள் நூலகங்கள் அருங்காட்சியகங்கள் சேகரித்து வைத்துள்ள அரிய உள்ளடக்கங்களை எளிதில் அணுகி இலவசமாகப் பெறக்கூடிய வகையில் புதிய வடிவில் திரும்ப இந்த உலகிற்கு அளிக்கத் தகுந்த அமைப்பாக உலக மின்னூலகம் செயல்பட வேண்டும் என்று விளக்கினார்.

அரசு தனியார் பங்களிப்புடன் தொடங்கப்பட்ட உலக மின்னூலகத்தில் 2005 ஆம் ஆண்டு கூகுள் நிறுவணம் உதவியாக இருந்தது.

பணிக் குழுக்கள்

பில்லிங்டன் தொலை நோக்கை நிறை வேற்ற ஒரு செயற் திட்டத்தைக் காங்கிரசு நூலகத்தில் உள்ள உலக மின்னூலக முது நிலை ஆலோசகர் முனைவர் ஜான் வான் ஒளடென்ரேன் 2006 ஆம் ஆண்டு கருத்தரங்கில் வழங்கினார்.

உலக மின்னூலகமானது தனது பங்குதாரர்களை முதன்மையான நான்கு திட்டப்பணிகளில் ஊக்குவிக்க வேண்டும் என்றார்.

அவை

- தொழில் நுட்ப கட்டமைப்பு
- தேர்வு செய்தல்
- நிர்வகித்தல்
- நிதியளித்தல்

2006 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பாரிசில் நடைப்பெற்ற உலக மின்னூலக வளர்ச்சி குறித்த மாநாட்டில் இக்குறிக்கோள் வடிவமைக்கப்பட்டது. நான்கு திட்டப் பணிகளில் உள்ள தனிப்பட்ட சிக்கல்களை ஆராய தனித்தனியான பணிக் குழுக்கள் அமைக்கப்பட்டன.

2007 ஆம் ஆண்டு முதற்பகுதியில் ஒன்று கூடி மின்னூலகத் துறையில் உள்ள தொழில் வல்லுநர்களையும் சேர்த்து கொண்டது.

ஒவ்வொரு நாடுகளில் இருந்து பணிக்குழுவினருக்கு உதவி செய்து வந்தனர். 2009 ஆம் ஆண்டு உலக மின்னூலகம் தொடங்கப்பட்டது.

காட்சிப்படுத்தல்

உலக மின்னூலகம் துவங்கப்பட்ட போது பல்வேறு காட்சிப்படுத்துதல்கள் சேர்க்கப்பட்டன.

அவைகள்

- ○ செஞ்யின் கதை
  - ○ 11 ஆம் நூற்றாண்டு ஜப்பான் கதை
  - ○ உலகில் முதன் முறையாக எழுதப்பட்ட புதினம்
  - ○ குழந்தை ஏசுவின் முதல் அசுடெக் குறிப்புகள்
  - ○ அல்ஜீப்ரா கணித வடிவமைப்பில் பயன்படுத்தப்பட்ட பழமை வாய்ந்த அரபு மொழி நூல்கள்.
  - ○ எட்டாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த ஆப்பிரிக்கா ஓவியமான ரத்தம் சிந்தும் மான்.
  - ○ அமெரிக்கா சென்று முதன் முறையாக குறிப்பிட்டு உருவாக்கப்பட்ட வால்டுசீமுல்லர் வரைப்படம்.
  - ○ மொழியில் பெயர்க்கப்பட்ட விவிலியம் ருசிய குருவால் அலுசியன்.
  - ○ மாலி நாட்டில் கிடைத்த இசுலாமிய கையெழுத்துப் பிரதி.
  - ○ லுமியர் சகோதரர்கள் உருவாக்கிய உலகின் முதல் திரைப்படம்
  - ○ இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் கல்வெட்டு ஒளிப்படம்

இது போன்று பல்வேறு நூல்களை உலக மின்னூல்கள் துவங்கப்பட்ட போது காட்சிப்படுத்தலின் போது சேர்க்கப்பட்டுள்ளன.

எண்ணிம நூலகம் **(Digital Library)**

"எண்ணிம நூலகம் என்பது எண்ணிமம் அல்லது மின்னியல் முறையில் நூல்கள், படங்கள், ஆவணங்கள், தகவல் தொகுப்புகளைச் சேகரித்து பாதுகாத்து வைத்திருக்கும் கணினி வழி அணுகக்கூடிய நூலகம் ஆகும்."6

எண்ணிம உள்ளடக்கங்களைக் கணினி இணையம் மூலமாக தொலைவில் இருந்தே அணுகிப் பெறலாம். எண்ணிம நூலகம் என்பது ஒரு தகவல் மீட்டெடுப்பு ஒருங்கியம் ஆகும். எண்ணிம நூலகமானது மின் நூலகம் மெய்நிகர் நூலகம், போன்ற பெயர்களாலும் குறிப்பிடப்படுகிறது.

மிக விரிவான எண்ணிம உள்ளடக்கங்களைச் சேகரித்து மேலாண்மை செய்து பாதுகாத்து அதன் பயனர்களுக்குத் தொகுப்புகளை தேவைப்படும் போது தேவையான அளவில் எழுதப்பட்ட கொள்கை விதிகளின்படி அளிக்கும் அமைப்புக்கு எண்ணிம நூலகம் என்று பெயர் வந்தது. டெலோஸ் மின்னூலகம் முன்மாதிரியாக இருக்கின்றன.

எண்ணிம நூலக வகைகள்

எண்ணிம நூலகம் என்ற சொல்லுக்கு பல்வகை எண்ணிமத் தொகுப்புகள் என்று குறிப்பிடுகின்றனர். மிகப் பரவலாக அறியப்பட்ட மின்னூலகங்கள் குறிப்பாக குறித்துள்ளார் பெர்சியசு திட்டம், குட்டென்பெர்க் திட்டம், ஐபிலியோ இவையனைத்தும் இணையத்தை விட பழமையானவை ஆகும்.

உலகளாவிய இணையம் மற்றும் தேடுபொறிகளின் திறன் வளர்ச்சி மற்றும் ஐரோப்பிய நூலகம், காங்கிரசு நூலகம் ஆகிய மின்னூலகங்கள் தற்போது இணையப் பின்புலத்தை அடிப்படையாகக் கொண்டு மேம்படுத்தப்பட்டு வருகின்றன.

பள்ளி, கல்லூரி, பொது நூலகங்களும் மின்னூல், ஒலி நூல் இசை, ஒளிப்படங்கள் போன்ற எண்ணிம உள்ளடக்கங்களைத் தரவிறக்கம் செய்வதற்கேற்ப மேம்படுத்தப்படுகின்றன.

ஓர் உள்ளடக்கம் உருவாக்கப்படும் போது எண்ணிம அமைவில் இருந்தால் அதனை இயல்பு எண்ணிம உள்ளடக்கம என்று குறிப்பிடுகின்றனர். பருண்மையாக உள்ள புத்தகங்கள் காகிதங்களை எண்ணிம வடிவிற்கு மாற்றினால் இதனை எண்ணிமப்படுத்திய உள்ளடக்கம் என்று குறிப்பிடுகின்றனர். இருப்பு வடிவிலும் எண்ணிம வடிவிலும் உள்ளடக்கத் தொகுப்புகளைக் கொண்டுள்ள நூலகத்திற்கு கலப்பு நூலகம் என்று பெயரிடப்பட்டது. எண்ணிம நூலகங்கள் நீண்ட நாள் ஆவணக் காப்பகங்களாகவும் செயல்படுகின்றன.

கல்விக் களஞ்சியங்கள்

பெரும்பாலான கல்வி நிலையங்கள் அவற்றின் புத்தகங்கள், கட்டுரைகள், ஆராய்ச்சிக் குறிப்புகள், வெளியீடுகள், ஆகியவற்றைக் கொண்ட கல்விக் களஞ்சியமாக மாறி வருகின்றன. கல்வியக மற்றும் நிறுவனங்களின் இலவச களஞ்சியங்கள் சில வேளைகளில் எண்ணிம நூலகங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

எண்ணிம நூலக முன்னோடிகள்

- 
  - குட்டென்பர்க் திட்டம்
  - கூகுள் புத்தக தேடி
  - இணைய ஆவணகம்
  - கார்னெல் பல்கலைக்கழகம்
  - காங்கிரசு நூலகத்தின் உலக மின்னூலகம்

எனவே இவை எல்லாம் எண்ணிம நூலக முன்னோடிகளாக இருந்திருக்கின்றன.

தமிழ் இணையப் பல்கலைக் கழக நூலகம்

**(Tamil Virtual University E – Library)**

உலகம் தழுவி வாழும் தமிழர்கள், தமிழ் ஆர்வலர்கள், தமிழ் அறிஞர்கள், தமிழ் பயில விரும்பும் மாணவர்கள் முதலியோர் படித்துப் பயன்பெறும் வகையில் தமிழ் இணையப் பல்கலைக்கழகம் மின்நூலகம் ஒன்றை அமைந்துள்ளது. தொல்காப்பியம் முதற்கொண்டு இக்கால இலக்கியம் வரையிலான 250 க்கும் மேற்பட்ட ஏறக்குறைய 1,00,000 பக்கங்களுக்கு மேல் இம்மின் நூலகத்தில் இடம் பெற்றுள்ளன.

தமிழ் இணையப் பல்கலைக் கழக மின் நூலகத்தில் உள்ள நூல்களை உலகில் எவரும் எங்கிருந்தும் எப்பொழுதும் இணைய வழியாகப் படித்தப் பயன் பெறலாம். ஓர் நூலை ஒரே நேரத்தில் எத்தனைப் பேர்

வேண்டுமானாலும் படித்தப் பயன பெறலாம். ஒருவர் வழக்கமான நூலகத்திற்குச் சென்று தமக்குத் தேவையான நூல்களைத் தேடிப் பெறுவதில் உள்ள சிக்கல்கள் நீங்குகின்றன.

"அவசரமான உலகத்தின் அவசரம் கருதி காலம் பொன்னானது என்ற பொன்மொழியை மனத்தில் கொண்டு படிப்பவர்களின் நேர விரியத்தைத் தவிர்க்கும் வகையில் இந்நூலகம் அமைக்கப்படுகின்றது."7 அரிய வசதிகள் கொண்ட இம்மின் நூலகத்தை விரும்புகின்ற அனைவரும் தற்பொழுது கட்டணம் ஏது மின்றி முற்றிலும் இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். இம்மின் நூலகமானது இலக்கண, இலக்கிய நூல்கள் உரோமன் வரி வடிவத்தமிழ் நூல்கள், அகராதிகள், கலைச்சொல், தொகுப்புகள், ஒளிக்காட்சித் தொகுப்புகள் என்ற வகையில் பகுக்கப்பட்டுள்ளது.

பொதுவாக நூலகத்தில் நூல்கள் மட்டுமே இடம் பெற்றிருக்கும் ஆனால், இம்மின் நூலகத்தில் தமிழர்களின் பண்பாட்டை எடுத்துரைக்கும் பண்பாட்டு நிகழ்ச்சிகளும், தமிழர்களின் இறை உணர்வைப் புலப்படுத்துகின்ற சைவ, வைணவக் கோயில்களின் ஒலி, ஒளிக்காட்சிகளும் இடம் பெற்றுள்ளன. தமிழர்களின் சமயப் பொறைக்கு எடுத்துக்காட்டாக இம்மின் நூலகத்தில் இசுலாமிய மற்றும் கிறித்துவ ஆலயங்களின் ஒலி, ஒளிக்காட்சிகள் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

உள்ளடக்க மின்னூல்கள்

தமிழ் இணைய பல்கலைக் கழக மின் நூலகத்தில் இடம் பெற்றுள்ள நூல்கள் இலக்கண நூல்கள், சங்க இலக்கியம், பதினெண் கீழ்கணக்கு, காப்பியங்கள், சமய இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், திரட்டு, நூல்கள், நெறி நூல்கள், சித்தர் இலக்கியங்கள், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியங்கள் உரைநடை, நாட்டுப்புற இலக்கியங்கள், சிறுவர் இலக்கியங்கள் என்னும் வகைப்பாட்டு முறைமையில் பகுத்தமைக்கப்பட்டுள்ளன.

இலக்கண நூல்கள்

- தொல்காப்பியம்
- புறப்பொருள் வெண்பாமாலை
- யாப்பருங்கலம்
- யாப்பருங்கலக்காரிகை
- தண்டியலங்காரம்
- நன்னூல்
- நம்பியகப் பொருள்
- தொன்னூல் விளக்கம்
- இலக்கண விளக்கம்
- தமிழ் நெறி விளக்கம்
- சிதம்பரப்பாட்டியல்
- நவநீதப்பாட்டியல்
- வீரசோழியம்
- தமிழ் நூல்
- முத்துவீரியம்

- சுவாமிநாதம்
- நேமிநாதம்

அறுவகை இலக்கணம்

இவை அனைத்து இலக்கண நூல்களுக்கு உரையுடன் அமைந்துள்ளன.

இலக்கிய நூல்கள்

தமிழ் இணைய பல்கலைக் கழக நூலகத்தில் 52 இலக்கிய நூல்கள் உரையுடன் இடம் பெற்றுள்ளன.

- சங்கஇலக்கியம்
- பதினெண்கீழ்க்கணக்கு
- ஐம்பெங்ருகாப்பியங்கள்
- ஐஞ்சிறுகாப்பியங்கள்
- பெருங்கதை
- கம்பராமாயணம்
- வில்லிபாரதம்
- அரிச்சந்திர புராணம்
- காஞ்சிப் புராணம்

சமய இலக்கியங்கள்

சமய இலக்கிய நூல்கள் சைவம், வைணவம், கிறித்துவம், இசுலாமியம் என்ற வரிசையில் அமைந்துள்ளன.

சைவம் - பன்னிரு திருமுறைகள்
திருவிளையாடற் புராணம்
கந்தபுராணம்
கல்லாடம்
மெய்கண்டசாத்திரங்கள்
திருமுறைத் தலங்கள்

வைணவம் - நாலாயிர திவ்யபிரபந்தம்
108 வைணவ திவ்யதேச ஸ்தலவரலாறு

கிறுத்துவம் - தேம்பாவணி

இரட்சணிய யாத்திரிகம்

திரு அவதாரம்

இயேசு காவியம்

இரட்சணிய மனோகரம்

இசுலாம் - சீறாப்புராணம்

நெஞ்சில் நிறைந்த நபிமணி

நாயகம் எங்கள் தாயகம்

யூசுப் ஜீலைகா

நாயகம் ஒரு காவியம்

சிற்றிலக்கியங்கள்

கலம்பகம் - கச்சிக்கலம்பகம்

உலா - மூவருலா

தூது - அழகர் விடுதூது

- தமிழ்விடுதூது

கோவை - தஞ்சைவாணன் கோவை

பிள்ளைத்தமிழ் சேக்கிழார் பிள்ளைத் தமிழ்

- திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்

- மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

பரணி - இரணியவதைப் பரணி

- கலிங்கத்துப்பரணி

அந்தாதி - அபிராமி அந்தாதி

- திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி

சதகம் - தண்டலையார் சதகம்

- அறப்பளீசுர சதகம்

- குமரேச சதகம்

- கொங்கு மண்டல சதகங்கள்

வெண்பா - நள வெண்பா

குறவஞ்சி - திருக்குற்றாலக் குறவஞ்சி

- தியாகேசர் குறவஞ்சி

பிரபந்தம் - அஷ்டபிரபந்தம்

ஆற்றுப்படை - புலவராற்றுப்படை

திரட்டு நூல்கள்

குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு 12 நூல்களும், சிவப்பிரகாச சுவாமிகள் பனுவல் திரட்டு 24 நூல்களும்,

இராமலிங்க அடிகளின் திருவருட்பா, தாயுமானவரின் தனிப்பாடல்கள் உள்ளிட்ட 38 நூல்கள் உரையுடன் அமைக்கப்பட்டுள்ளன.

நெறி நூல்கள்

மனிதர்களை நெறிப்படுத்தும்நோக்கில் நெறிநூல்கள் உருவாக்கியுள்ளார். அவ்வகை நுல்கள்

- ஆத்திசூடி
- கொன்றை வேந்தன்
- மூதுரை
- நல்வழி
- வெற்றிவேற்கை
- உலகநீதி
- நீதி நெறி விளக்கம்
- அறநெறிச்காரம்
- நீதிநூல்

சித்தர் இலக்கியங்கள்

இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் கவிதை

- பாரதியார்
- பாரதிதாசன்
- வேதநாயகம்பிள்ளையின் பெண்மதி மாலை
- கவிஞர் முடியரசனின் பூங்கொடி
- தமிழ் ஒளி கவிதை

இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் உரைநடை

சிறுகதை, புதினம், நாடகம், கட்டுரை, என்ற முறையில் நூல்களை அமைத்துள்ளது.

சிறுகதை - பாரதியார்கதைகள்

புதினம் - அகல் விளக்கு (மு.வ)

- சமுதாய வீதி (நா.பார்த்தசாரதி)

- வேங்கையின் மைந்தன் (அகிலன்)

நாடகம் - மனோன்மணீயம்

கட்டுரை - புத்தர் அருளிய தம்மபதம்

திறனாய்வு - அறமும் அரசியலும் ((மு.வ)

- இலக்கிய ஆராய்ச்சி ((மு.வ.)

- தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்
(மயிலை சீனி.வேங்கடசாமி)

- பதினெண் கீழ்கணக்கும் தமிழர் வாழ்வும்
(சாமி.சிதம்பரனார்)

- பாரதியார் கட்டுரைகள்

- பாவாணர் படைப்புகள் (30 நூல்கள்)

வரலாறு

மொழி வரலாறு, இலக்கிய வரலாறு, வாழ்க்கை வரலாறு, நாட்டு வரலாறு, நாட்டுப்புற இலக்கியங்கள், சிறுவர் இலக்கியங்கள், என பல இலக்கிய நூல்கள் அமைந்துள்ளன.

மொழி வரலாறு

தமிழ் மொழிவரலாறு (தொ.பொ.மீ)

இலக்கியவரலாறு சமணமும் தமிழும்
(மயிலை சீனி.வேங்கடசாமி)

தமிழ் இலக்கிய வரலாறு ((மு.வ.)

பௌத்தமம் தமிழும்
(மயிலை சீனி.வேங்கடசாமி)

விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு
(மா.பொ.சி)

வாழ்க்கை வரலாறு

என்சரித்திரம் (உ.வே.சா)

நாட்டுவரலாறு குடியாட்சி (அப்பாதுரை)

தமிழகம் (கா.அப்பாதுரை)

தமிழ் இந்தியா (ந.சி.கந்தையாபிள்ளை)

தொண்டு (கா.அப்பாதுரை)

நாட்டுப்புற இலக்கியங்கள்

தமிழர் நாட்டுப் பாடல்கள் (நா.வானமாமலை)

மலையருவி (கி.வா.ஜகநாதன்)

முத்துப்பட்டன் கதைப்பாடல் (நா.வானமாமலை)

சிறுவர் இலக்கியங்கள்

வாண்டுமாமா படைப்புகள்

(கதைகதையாம் காரணமாம்)

உரோமன் வரிவடிவ நூல்கள்

தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய நூல்கள் முழுமையாக உரோமன் வரி வடிவத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

அகராதிகள்

தமிழ் இணைய பல்கலைக்கழக மின் நூலகத்தில் இலக்கண, இலக்கிய நூல்களேயன்றிச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலம் - தமிழ் அகராதி, பால்ஸ் அகராதி, மு.சண்முகம்பிள்ளையின் தமிழ் - தமிழ் அகரமுதல் ஆகிய நான்கு அகராதிகள் இடம் பெற்றுள்ளன. சொற்களுக்கான பொருளை அகர வரிசை முறையிலும், வேண்டிய சொற்களுக்கான பொருளைத் தேடிப் பெறும் வகையிலும், அச்சுவடிவ அகராதியைப் பார்ப்பதைப் போலவே பக்கம் பக்கமாகப் பார்க்கும் வகையிலும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

கலைச்சொற்கள்

சமுதாயவியல், கலை மானிடவியல், அறிவியல், மருத்துவவியல், தகவல் தொழில் நூட்பவியல், சட்டவியல், கால்நடை மருத்துவவியல், பொறியியல் தொழில் நுட்பவியல், மனைஇயல், உயிர்த் தொழில் நுட்பவியல், வேளாண்மைப் பொறியியல் ஆகிய துறைகளைச் சார்ந்த அளவுகடந்த கலைச்சொற்கள் இந்நூலகத்தில் அடங்கியுள்ளது.

சுவடிக் காட்சியகம்

ஓலைச்சுவடிகள் உள்ள தமிழ் இலக்கியங்களைப் பாதுகாக்கும் வகையிலும் இம்மின்னூலகம் பணியாற்றி வருகிறது. ஓலைச் சுவடிகளை ஒளிப்பட நகல் எடுத்துப் பாதுகாத்து வருகிறது. ஓலைச்சுவடிகள் மட்டுமன்றிச்

சில அரிய காகிதச் சுவடிகளையும் பாதுகாத்து வைப்பதோடு அவற்றை இணையம் வழியாகக் காட்சிக்கும் அளிக்கிறது. அவ்வகையில் கீழ்க்காணும் ஓலைச்சுவடிகள் காணக்கிடைக்கின்றன.

பண்பாட்டுக் காட்சியகம்

தமிழர்களின் பண்பாட்டை வெளிப்படுத்தும் வகையில் பின்வரும் பகுதிகள் அமைந்துள்ளன. ஒவ்வொன்று பற்றியும் சுருக்கமான விளக்கம், படக்காட்சிகள், ஒலி ஒளிக் காட்சிகள் ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன.

திருத்தலங்கள் - 14 சமணத்தலங்கள்

- 101 சைவத்தலங்கள்
- 93 வைணவத்தலங்கள்
- 9 இசுலாமியத் தலங்கள்
- 13 கிறித்துவத் தலங்கள்

திருவிழாக்கள் - 7 தேர் திருவிழாக்கள்

- 8 பல்வேறு விழாக்கள்

கலைகள் - 16 வகையான கலைகள்

வரலாற்றுச் சின்னங்கள் 3 சின்னங்கள்

விளையாட்டுகள் - 5 வகையான விளையாட்டுகள்

ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்

**(Roja Muthiah Resarch Library)**

ரோஜா முத்தையா செட்டியாரின் நினைவால் சிக்காகோ பல்கலைக்கழகம் இந்நூலகத்தை 1994 முதல் நடத்தி வருகிறது. ஏறக்குறைய ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட அரிய நூல்களும், இதழ்களும் இந்நூலகத்தில் உள்ளன.

நூலாசிரியர், நூலின் தலைப்பு, நூல் வெளிவந்த ஆண்டு என்ற அடிப்படையில் இந்நூலகத்தில் உள்ள நூல்களின் பட்டியலை அமைத்தனர்.

ஆராய்ச்சியாளர்கள் இணையத்தில் தேடிப்பெறும் வகையில் 1996 முதல் செயல்படுத்தி வருகிறது. ஆய்வாளர்கள் இருந்த இடத்தில் இருந்து கொண்டே ஆய்வுக்குத் தேவையான நூல்கள் உள்ளனவா என்பதை அறிந்துகொண்டு வேண்டிய நூல்கள் இருந்தால் இந்நூலகத்திற்குச் சென்று பயன் பெறலாம்.

சென்னை நூலகம் **(Chennai Library)**

2006 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இத்தளம் வணிக நோக்கத்துடன் தொடங்கப்பட்டது. ஆயினும் தமிழ் இலக்கியங்களை ஒருங்குகுறியீட்டு முறையில் இலவசமாகப் பார்ப்பதற்கு இத்தளம் அனுமதிக்கிறது. பழந்தமிழ் நூல்கள் முதல் அண்மைக்கால எழுத்தாளர்களின் நூல்கள் வரை பரவலாக இத்தளத்தில் வெளியிடப்படுகின்றன.

உள்ளடக்க நூல்கள்

எட்டுத்தொகை நூல்கள், பத்துப்பாட்டு நூல்கள், பதினெண் கீழ்கணக்கு நூல்கள், ஐம்பெருங் காப்பியங்களில் மணிமேகலை தவிர்த்த பிற நான்கு காப்பியங்கள், இலக்கண நூல்களில் யாப்பருங்கலக் காரிகை ஆகியவை தற்போது இத்தளத்தில் கிடைக்;;கின்றன. நால்வர் நான்மணிமாலை திருவிசைப்பா, திருமந்திரம், திருவாசகம், ஆகிய சைவ சித்தாந்த நூல்களும், திருக்களிற்றுப்படியர் திருவுந்தியார், ஆகிய மெய்கண்ட சாத்திரங்களும் கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, திருப்புகழ் ஆகிய முருகப் பக்தி நூல்களும் இதில் இடம் பெற்றுள்ளன. இவற்றை எண் அடிப்படையில் தேடிப்பெறும் வகையில் தரப்பட்டுள்ளன.

கம்பர், திருஞானசம்பந்தர், திரிகூடராசப்பர், குமரகுருபர், ஔவையார், பாரதியார், பாரதிதாசன், அண்ணா, மு.வரதராசன், ந.பிச்சமூர்த்தி, ஆகியோரின் நூல்களும் இந்நூலகத்தில் கிடைக்கப்பெறுகின்றன.

## நூலகம்.நெட் (Noolaham.net)

ஈழத்து நூல்களையும் இதழ்களையும் மின்வடிவமாக்கிப் பாதுகாத்து அவற்றை எவரும் எப்பொழுதும் இணையத்தில் எளிதாகப் பெற்றுப் படிப்பதற்கு ஏற்ற வண்ணம் வெளியிடும் பணியில் நூலகம் நெட் செயல்பட்டு வருகிறுது. இது ஓர் இலாப நோக்கமற்ற தன்னார்வக் கூட்டுமுயற்சி ஆகும். இதன் பணிகள் ஏறக்குறைய மதுரைத் திட்டம் போலவே அமைந்துள்ளது.

நூலகம் நெட் தொடக்கத்தில் ஈழநூல் என்ற பெயரில் இருந்தது தி.கோபிநாத், மு.மயூரன், ஆகியோர் 2005 ஜனவரியில் இதனைத் தொடங்கினர். சில காரணங்களால் நின்று போன இத்திட்டம் 2006 தமிழர் திருநாளன்று நூறு மின்நூல்களுடன் மீண்டும் உதயமானது. இதில் ஆவண வகைகள், பகுப்புகள், பட்டியல்கள், என மூன்று பெரும் தலைப்புகள் இடம் பெற்றுள்ளன.

ஆவண வகைகள்

நூல்கள், பத்திரிக்கைகள், பிரசுரங்கள், ஆய்வேடுகள், ஆகும்.

பகுப்புகள்

எழுத்தாளர்கள், வெளியீட்டு ஆண்டு, பதிப்பகங்கள், நூல்வகை ஆகும்.

பட்டியல்கள்

நூறு எண்கள் கொண்ட தொகுப்புகளாக 2063 நூல்கள் மற்றும் இதழ்கள், இத்தலைப்புகளில் மட்டுமின்றி பிற மின்னூல்கள் என்ற தேடல் பிற நிறுவனங்களின் மின்னூல்களையும் காணலாம்.

இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்

**(Central Institute of Indian Languages – (CIIL)**

மைய அரசு நிறுவனமான இது மைசூரில் உள்ள மானசகங்கோத்ரியில் அமைந்துள்ளது. இந்நிறுவனம் தமிழ் நூல்களை அதன் பழமை குன்றாமல் மூலப்பிரதியில் முனைப்புடன் செயல்பட்டுவருகிறது.

தொல்காப்பிய நூற்பாக்கள் சிலவற்றையும் சங்க இலக்கியப் பாடல்கள் சிலவற்றையும் இசைவடிவில் இணையத்தில் வழங்கியுள்ளது. பாடல்கள் மட்டுமன்றி நூற்பாக்களைக்கூட இசை வடிவில் வழங்க முற்பட்டுள்ள இந்த நிறுவனத்தின் முயற்சி பாராட்டுக்குரியதாக அமைந்திருக்கிறது.

தொகுப்புரை

மின்னூல்கள் இன்றைய தொழில் நூட்ப உலகில் மிகவும் புகழ்பெற்று மறுவெளியீடு செய்து வருகின்றது.

நாம் அன்றாடம் பயன்படுத்தும் புத்தகங்களில் இருந்து மாறுபட்டு மின் புத்தக பயன்பாட்டுக்கு மாறி வருகிறார்கள்.

இணைய வசதியை பெற்று ஒரு ஆய்வுக்குத் தேவையான தகவல்களையும், புத்தகங்களையும், இணையத்தில் பெறும் அளவிற்கு வசதிகள் கொண்டு உருவாக்கிவிட்டனர்.

**Press books.com** என்ற வலையதளத்தைப் பயன்படுத்தி ஒரு கணக்கு உருவாக்கி அதில் உள்ள கருவிகளைப் பயன்படுத்தி யாருடைய உதவியும் இல்லாமல் நாம் ஒரு கட்டுரையோ, புத்தகத்தையோ, தனியுரிமையாகவும், பொது உரிமையாகவும் மின்னுலாக உருவாக்கி வெளியிடமுடியும்.

தமிழ் மொழியில் இன்று பரவலாக இருக்கும் நூல்களை அனைத்தும் மின்னூலாக மாற்றி வருகின்றனர்.

தமிழில் ஆய்வு செய்யும் ஆராய்ச்சியாளர்கள் சிறு குழுக்களாக சேர்ந்து தன் ஆய்வேடுகளை மின்னூலாக உருவாக்குவது உண்டு. ( மதுரை திட்டம்)

மின்னூல்களை ஒரு கட்டமைப்பாக வைப்பதற்கு மின்னூலகங்கள் உருவாக்கினர். அந்நூலகத்தின் மூலமாக பல மின்னூல்களை வெளியிட்டு வருகின்றனர்.

இனி வரும் காலங்களில் கட்டமைக்கப்பட்ட புத்தகங்களைப் படிப்பதைத் தவிர்த்து விட்டு மின்னூல் படிக்கும் முறை அதிகமாக வளர்ந்து வருகின்றன.

## இணைய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

இணையப் பரப்பில் முக்கியமாகக் கருதப்படுவது இணைய இதழ்கள் ஆகும். இணையத்தில் மட்டுமே இடம் பெறும் இதழ்களை இணைய இதழ்கள் என்று குறிப்பிடுவது உண்டு. இதழியல் துறையின் முன்னேற்றத்திற்கு அறிவியல் துறை முக்கியமான ஒன்றாக கருதப்பட்டது. பின்னர் செய்தி பரிமாற்றமானது எளிதாக மாறியது. இதன் தொடர்ச்சியாக ஒலி, ஒளி, ரேடியோ, தொலைக்காட்சி, மற்றும் கணினி, தோன்றிய பிறகு அச்சுத்துறையில் மாற்றம் ஏற்பட்டு, இதழியல் மேலும் பல படிநிலை உருமாற்றம் பெற்றது. இவ்வாறு தோன்றிய இதழ்கள் இணையத்தின் மூலம் உலகத்தின் கண் இமைக்கும் இணையம் பாலமாக அமைந்தது. இவ்வாறு தோன்றிய இணைய இதழ்களும், நேரடியாக வெளிவந்த இதழ்களும், இணையத்தில் அரங்கேற்றம் பெற்றன. இணைய இதழ்களின் தோற்றமும், வளர்ச்சியும், வளர்ந்து கொண்டே வருகின்றன.

தமிழில் மின் இதழ்கள் தோன்ற காரணம்

உலகம் தோன்றிய நாளிலிருந்து இன்று வரை தமிழர்கள் தங்களுக்கென்று தனியொரு பதிவுகளை இப்புவியில் நிகழ்த்தியுள்ளனர். இவர்கள் அறியாத துறையே இல்லை என்ற அளவிற்கு அரிய பலவற்றை நிகழ்த்தியுள்ளனர். இணையத்தில் தமிழ் இதழ்கள் தேன்றிய காரணமாக இருந்தவர்களில் முக்கியமானவர்கள் புலம்பெயர்ந்த தமிழரே ஆவார். அவர்கள் நாடு, இனம், மொழி, என கடல்கடந்து சென்றாலும், தங்களுடைய பண்பாடு நாகரிகம் என்கின்ற, அடையாளத்தோடு வாழ்ந்து வருகின்றனர். தமிழ் மொழியைப் பேசவும், கேட்கவும், மேலும் அந்நாட்டிலுள்ள, மொழிகளிலுள்ள கூறுகளைத் தமிழ் இணைய இதழ்களின் மூலமாகவும், மின்னஞ்சல் மூலமாகவும், அனுப்பி செய்திகளை அறிந்து கொள்ள தமிழ் இணைய இதழ்களை உருவாக்கிக் கொண்டார்கள்.

இணைய இதழியல்

"இணையத்தில் பொதுவான செய்திகளையும் பொழுது போக்குகளையும் முறையாக நம்பகமான வகையில்பரப்பும் இதழியல் பயணிகள் இணையம் எனும் ஊடகத்தின் வழியே நிகழ்த்தப்படும் பொழுது அது இணைய இதழியல் என்று அழைக்கப்டும்."1

இவ்வாறான நவீன இதழியலை இணைய இதழியல் என்பர். இணையத்தில் மட்டுமே வெளிவரக்கூடிய அனைத்து தமிழ் இணைய இதழ்களையும் தமிழில் வெளியாகும் வலைப்பூக்களையும், தமிழ் இணையச் சிற்றிதழ்கள் என்ற ஒரு வரையறைகுள் அடக்கலாம்.

இணைய இதழ்களின் தோற்றம்

இதழியல் துறையானது ஆரம்ப காலகட்டத்தில் ஜீலியஸிசர் தனது தினசரி நிகழ்வுகள் மற்றும் அலுவலக குறிப்புகள் அனைத்தையும் எழுதிவைத்தார். என்பதை அறிவோம். காலபோக்கில் அச்சு இயந்திரம் வந்தபிறகு அவற்றின் மூலம் செய்திகள் வெளியானதும் அடுத்த கட்டத்தில் அறிவியல் வளர்ச்சியால் கணினி வருகைக்குப்பிறகு இதழியல் துறைக்கு புத்தணர்ச்சி பெற்றது. இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் மின்னச்சு சாதனங்களின் வளர்ச்சியால் இதழியல் இணையம் என்ற புதியதுறை உருபெற்றது.

“இணையமானது 1969 ஆம் ஆண்டு தோன்றிய தகவல் தொடர்புப் புரட்சியால் உலகம் தகவல் சமுதாயமாக மாற கால் நூற்றாண்டே போதுமானதாகிவிட்டது. 1969 ஆம் ஆண்டு இணையம் தேன்றிய ஆண்டாக அறிய முடிகிறது”2

இணைய இதழியல் துறையானது முதன்முதலில் உலக அளவில் 1970 ஆம் ஆண்டு தொடங்கியது. ஐசக்அசிமோஷ் என்பவர் அறிவியல் புனைவுகளை வடிவமைக்க கணினியை பயன்படுத்தத் தொடங்கினார். 1970 ஆம் ஆண்டில் இரண்டு வகையான இணைய இதழியல் சாதனங்கள் வெளியிட்டன. அவை தொலைவரி **(Tell Text)** மற்றும் காட்சி வழி **(Video Text**) ஆகும். அமெரிக்காவில் மற்றும் உலகெங்கிலும், உள்ள நிறுவனங்களை இணைக்க கூடிய பைநெட், இன்டர்நெட், என்ற இரு மின்னணு இணையத் தொடர்புத் திட்டங்கள் வரையறுக்கப்பட்டன.

“1985 – ல் டெக்சாசில் உள்ள ஹீஸ்டன் பல்கலைக்கழகத்தின் ரோட்மோர்காக் என்பவரால் பைநெட் சைக்கோலாக்கி நியூஸ்லெட்டர் என்ற முதல் மின்னணு இதழ் வெளியிட்டது”3

எலக்ட்ரானிக் ஸ்கை ரைட்டிங் என்பதே மின்னணு இதழின் அடிப்படையாகும். 1992 ஆம் ஆண்டு 6 மின்னணு இதழ்கள் கணிப்பான் இணைத் தொடர்கள்

மூலம் சந்தாதாரர்களுக்குக் கிடைத்தன. எலக்ட்ரானிக்ஸ் ஸ்கை ரைட்டிங் அறிமுகமான பின்னர் இணையத்தில் தமிழ் இதழ்கள் தோன்ற ஆரம்பித்தன.

இணையத்தில் நுழைந்த இந்திய மொழி என்ற பெருமை தமிழுக்கு உண்டு. 1986 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இதழ் இணையத்தில் ஏறியதாக அறியப்படுகிறது. உலக தமிழர்களை ஒன்றினைக்கும் பாலமாக இணையமானது விரைவாக பரவும் வகை செய்கிறது.

கணினி மூலம் தமிழை இணையத்தில் ஏற்றிவைத்து அழகுபார்த்தவர்கள் புலம்பெயர்ந்த தமிழர்களே ஆவார். முதல் கட்டத்தில் தாங்கள் கண்டுபிடித்த தமிழ் எழுத்துக்களைப் பன்படுத்தி மின்னஞ்சல் அனுப்பித் தங்களுக்குள் உறவை வளர்த்து வந்தனர்.

“1992 – 1993 ஆம் ஆண்டுகளில் எஸ்.சி தமிழ் இலக்கிய மன்றம் ‘அ’ என்று ஒரு இலக்கிய மின்னிதழை நடத்தியது.”4 இதுவே முதல் தமிழ் மின்னிதழாக இருக்கவேண்டும் என்றும், ‘தேனி’ என்ற இதழும்; முதல் இதழ்கள் என்று கருதப்படுவதுண்டு.

இணைய இதழ்களை இரண்டு விதமான நிலையில் வகைப்படுத்தலாம். அவை

அச்சு வடிவிலிருந்து இணைய இதழ்களாக இயங்குபவை.

நேரடியாக தொடங்கும் போது இணையத்தில் இதழ்களாக வெளிவருபவை.

எனவே, இணையத்தில் நேரடியாக தொடங்கப்பட்ட தமிழின் முதல் மின்னிதழ் என்ற பெருமையை ‘தினபூமி.காம்’ ஆகும். இந்த மின்னிதழ் தினசரி செய்திகளுக்கான இதழாக விளங்குகிறது. இதனை தொடர்ந்து “1.05.1996 ஆம் ஆண்டில் தமிழ் சினிமா.காம் என்ற இதழே உலகின் முதல் தமிழ் இணைய இதழாகும். இதனைத் தொடங்கியவர் மா. ஆண்டோ பீட்டர் ஆவார்.”5

தமிழ் இணைய இதழ்களின் வளர்ச்சி

இணையத்தில் 1996 க்குப் பிறகு இணைய இதழ்களின் அசுர வளர்ச்சி அடைந்தது. அச்சில் வெளிவரும் தமிழ் சிற்றிதழ்களைப் போலவே இணையத்தில் வெளிவரும் பல தமிழ் இணைய இதழ்கள் உள்ளது. குறிப்பிட்ட எல்லைக்குள் குறைவான வாசகர்களைச் சென்றடையும் சிற்றிதழ்களைப் போல் இணைய இதழ்களுக்கான இணைய எல்லை விரிவாக இருந்தாலும் இணைய இதழ்களைப் படிக்க இணையம் பயன்படுத்தக்கூடிய திறன் இன்றி தேவையாக உள்ளது.

தமிழ் இணையச் சிற்றிதழ்கள் அதிகம் தோன்றுவதற்கு மிக முக்கியமானவர்கள் தமிழர்களே ஆவார். சாதி, மதம், நாடு, எல்லாவற்றையும் கடந்து தம் தாய்மொழியின் மீது வைத்திற்கும் பற்றால் தமிழ் இணைய இதழ்கள் அதிகமாகிக் கொண்டே செல்கின்றன. இவ்வாறு தோன்றிய இதழ்களுக்கு வாசகர்கள் எண்ணிக்கை பாதியாக உள்ளது. இன்றைக்கு இணையத்தில் மட்டும் அச்சு வடிவ இணைய இதழ்களும் இணையத்தில் வடிவ இதழ்களும் 200 க்கு மேல் வளம் வந்து கொண்டிருக்கிறது. இவற்றைத் தொடர்ந்து பல்வேறு விதமளான மின் இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இணைய இதழ்களின் வகைப்பாடானது அதன் வெளியீட்டு முறைகளுக்கு ஏற்றாற் போன்று நாளிதழ், வார இதழ், மாத இதழ், என்றெல்லாம் வகைப்படுத்த முடியும். நாளிதழையும், காலை இதழ், மாலை இதழ், என வகைப்படுத்த முடியும். இவ்வாறு வளர்ச்சியடைந்த இணைய இதழ்களைப் பின்வரும் பொருண்மைகளில் வெளியிடப்பட்டுள்ளன.

ஆன்மீகம், சமூகம், அரசியல், இலக்கியம், ஆய்வு, பகுத்தறிவு, பெண்கள், சமையல், நகைச்சுவை, திரைப்படங்கள், அறிவியல், தொழில்நுட்பம், வணிகம், சோதிடம், சிறுவர் கவிதை, மருத்துவம், நூலகம், திருமணம், பல்சுவை, பாலியல் உறவுகள், சங்க அமைப்புகள், தனிமனிதர் கருத்துக்கள் திரட்டிகள்

எனப்பல வகையான கருத்துக்கள் இணைய இதழ்களில்; வெளியாகின்றன.

ஆன்மீகம்

தமிழைத் தாய்மொழியாகக் கொண்டுள்ள இனங்களில் அவர்கள் அதிகமாகச் சார்ந்துள்ள மூன்று மதங்களின் அடிப்படையில் கொள்கை, கோட்பாடுகள், மற்றும் அதன் வழி முறைகளை வெளிப்படுத்தும் தகவல்களை அதிகமான உள்ளடக்கங்களாகக் கொண்டு சில இணைய இதழ்கள் வெளியாகிக் கொண்டிருக்கின்றன. ஆன்மீக வழியிலான இந்த இணைய இதழ்களை மதங்களின் அடிப்படையில் மூன்று உட்பிரிவுகளாக வகைப்படுத்தலாம்.

மூன்று பிரிவுகள்

- இந்து மதம்
- கிறித்துவ மதம்
- இசுலாமிய மதம்

இந்து மதம்

கடவுள் பல வடிவங்களில் பல பெயர்களில் இருப்பதான நம்பிக்கையும் ஒவ்வொரு கடவுளுக்கும் தனித்தனியான சக்தி இருப்பதான நம்பிக்கையும் இந்து மதத்தில் இருக்கிறது. இதனால் இந்துமதக் கருத்துக்களை வலியுறுத்தும் இணையச் சிற்றிதழ்களில் பொதுவான இந்து மதக் கருத்துக்களை விட குறிப்பிட்ட இந்துமதக் கடவுள் மற்றும் ஆன்மீகப் பெரியவர்களின் செயல்பாடுகள் போன்றவற்றை வலியுறுத்தும் தகவல்கள் அதிகமாக இடம் பெற்றிருக்கின்றன.

இந்து மத இதழ்கள்

- தமிழ் ஹிந்து
- காம கோடி
- டெம்பிள் டிவைன் சக்சஸ்

- சிவ சிவ

கிறித்துவ மதம்

கிறித்துவ மத அடிப்படையிலான தமிழ் வேதாகம கருத்துக்கள், கிறித்துவப் பாடல்கள், கிறித்துவக் கொள்கைகள் கிறித்துவ மதச் செய்திகள், தகவல்கள் என்று கிறித்துவ, மதத்தை வலியுறுத்தும் தகவல்கள் இங்கு அதிக அளவில் இடம் பெற்றிருக்கின்றன.

கிறித்துவ மத இதழ்

- தமிழ் கிறிஸ்டியன்ஸ்
- திருமறை தீபம்
- இரட்சிப்பின் வழி
- நம்பிக்கை மலர்

இசுலாமிய மதம்

இசுலாம் மதத்தின் புனித நூலான திருக்குர் - ஆனில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்கள், இறைதூதர்கள், இசுலாமிய மதத்தில் கடைப்பிடிக்கப்படும் தொழுகை, நோன்பு என்று இசுலாமிய மதக் கருத்துக்களை வலியுறுத்தும் பல தகவல்கள் இங்கு முக்கியச் செய்திகளாக இடம் பெற்றிருக்கின்றன.

இசுலாமிய மத இதழ்

- இஸ்லாம் கல்வி . காம்
- சத்தியமார்க்கம்.காம்
- இஸ்லாம் குரல்
- தமிழ் இஸ்லாம்
- சத்தியப்பாதை
- தமிழில் குர்ஆன்
- இதுதான் இஸ்லாம்

சமூகம்

- மக்கள் சட்டம்

அரசியல்

- கூடல்
- நெருப்பு
- தமிழ் அலை
- ஈரனல்

இலக்கியம்

- அப்பால் தமிழ்
- தமிழ்க் காவல்
- தமிழ் கூடல்
- திண்ணை
- ஆறாம் திணை
- தமிழ் தராமதி

ஆய்வு

- தமிழ் கூடல்
- தமிழ்த்திணை
- காந்தீயம்
- கணியத்தமிழ் சாப்ட்வேர்
- தமிழ் மரபு அறக்கட்டளை

பகுத்தறிவு

- பெரியார் குரல்
- தந்தை பெரியார்
- திராவிடர்

பெண்கள்

- கூடல்.காம்
- தோழி.காம்

சமையல்
- அறுசுவை

நகைச்சுவை
- அப்புசாமி.காம்

திரைப்படங்கள்
- தமிழ் சினிமா
- விடுப்பு
- சினிமா எக்ஸ்பிரஸ்

அறிவியல் மற்றும் தொழில் நுட்பம்
- தொழில் நுட்பம்
- சீன வானொலி நிலையம்
- அறிவியல் உலகம்

வணிகம்
- சென்னை நூலகம்
- கணியத் தமிழ்

சோதிடம்
- சோதிடம்

சிறுவர்
- சிரிதரன்
- கானவி.கொம்
- நம்நாடு
- தமிழ் க்ராஸ் வேடு

கவிதை

- வார்ப்பு
- நிலாரசிகன் கவிதைகள்
- கவிமலர்
- சுபம் கவிதைகள்
- தீபம் கவிதைகள்

மருத்துவம்
- ஹாய் நலமா
- ஈகை சித்த மருத்துவம்

நூலகம்
- விருபா
- காந்தளகம் தமிழ் நூல்
- சென்னை நூலகம்
- எனி இந்தியன்

திருமணம்
- திருமணம்

பல்சுவை
- முத்துக்கமலம்
- கீற்று
- தமிழோவியம்
- பதிவுகள்
- மரத்தடி.காம்
- தமிழ்சிகரம்.காம்
- இதயநிலா
- தமிழ்விசை

- மன ஓசை

பாலியல் உறவுகள்
- ஈகரை மன்மதன் ரகசியம்

திரட்டிகள்
- தமிழ் மணம்
- திரட்டி.காம்
- தேன் கூடு
- தமிழ் வெளி
- சங்கமம்
- தமிழ்பாரதி

சங்க அமைப்புகள்
- தமிழ் இசைச் சங்கம்
- வாசிங்டன் வட்டாரத் தமிழ்ச் சங்கம்
- ரியாத் தமிழ்ச் சங்கம்
- சந்நிதியான் ஆச்சிரமம்
- மதுக்கூர் இணையம்
- உரும்பிராய் இணையம்
- சித்தார் கோட்டை

(இந்தியா) வார இதழ்
- இஸ்லாமிய இணையம் இந்திய மாத இதழ்
- திருமறைத் தீபம் நியூசிலாந்து காலண்டு இதழ்
- அருள்பூமி இந்தியா மாத இதழ்
- வலைத்தமிழ் இந்தியா
- சிறகு இந்தியா வார இதழ்

- தமிழ்மண்  இந்தியா மாத இதழ்
- அன்னை  இந்தியா மாத இதழ்
- சக்தி மாத இதழ்
- அரும்பு  இந்தியா  மாத  இதழ்
- நிலவு

அச்சு வடிவிலிருந்து பிறகு இணையத்தில் ஏறிய இணைய நாளிதழ்கள்

- தினமலர்
- தினகரன்
- தினதந்தி
- தி - இந்து
- மாலை மலர்
- தின மணி
- தினக்குரல்
- தமிழ் முரசு
- மாலைச் சுடர்
- ஒரு பேப்பர்
- முரசொலி
- தின பூமி
- தாய் நாடு

அச்சிலும் இணையத்திலும் வெளிவரும் இணைய இதழ்கள்

- குமுதம்
- ஆனந்தவிகடன்

- வெப்புலகம்
- பி.பி.சி.தமிழ்
- சிபி தமிழ்
- தமிழ்பிலிம் மியூசிக்
- விடுதலை
- கல்கி
- காலச்சுவடு
- உயிர்மை
- நக்கீரன்
- தி.க.பெரியார்
- திராவிடர்
- முத்தமிழ் மன்றம்
- மங்கையர் மலர்
- முத்தமிழ்ச் சங்கம்
- புதியதலை முறை
- புதியதலை முறை கல்வி
- பனுவல்
- ஆய்த எழுத்து
- உலகத் தமிழ்

இவ்வாறு பல்வேறு இணைய இதழ்கள் இணையத்தில் வெளிவந்து கொண்டிருக்கின்றன. இவற்றின் மூலம் தமிழ் மொழியானது பல்வேறு நிலைகளில் வளர்ந்து வருகின்றது. இதழ்களின் கால அளவுகளும், தன்மை, பற்றியும் எடுத்து விளக்குகின்றது.

காலஅளவுகள்

அச்சு இதழ்கள் கால அளவின் அடிப்படையில் வெளியிடப் படுவதைப் போன்று இணையத்தில் வரும் இதழ்கள் வாரம் ஒரு முறை, மாதம் மிருமுறை, மாதம் ஒருமுறை, என்கிற கால அளவுகளில் புதிப்பிக்கப்படுகின்றன. பல இணைய இதழ்கள் குறிப்பிட்ட கால அளவுகள் ஏதுமின்றி அதை நடத்துபவரின் விருப்பத்திற்கேற்பவும் அதற்கான படைப்புகள் கிடைப்பதற்கேற்பவும் அவ்வப்போது வலைப்பதிவரின் வசதிக்கேற்பவும் புதுப்பிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

சில முக்கிய இணைய இதழ்கள் கால அளவு முறையைச் சரியாகப் பின்பற்றி வருகின்றன. இவற்றில் குறிப்பாக தமிழோவியம், நிலாச்சாரல், வார்ப்பு, போன்ற இணைய இதழ்கள் வராம் ஒரு முறையும், முத்துக்கமலம், மாதம் இரு முறையும் பதிவுகள், மாதம் ஒரு முறையும் புதுப்பிக்கப்பட்டு கொண்டிருக்கின்றன. பல இணைய இதழ்கள் புதுப்பிக்கப்படும் கால நடைமுறையைப் பின்பற்றுவதில்லை.

தன்மை

அச்சு இதழ்களைப் போல் இணையத்தில் வரும் இதழ்களையும் இதன் உள்ளடக்கத்தில் இருக்கும் கருத்துக்களின் தன்மைகளுக்கேற்ப மூன்று வழியில் வகைப்படுத்தலாம்.

அவை

- தரம்
- நடுத்தரம்
- தரமில்லாதவை

தரம்

ஆழமான பொருள் நிறைந்த உள்ளடக்கங்களுடன், தகுதியுடையவர்கள் படிக்கக் கூடிய உயர்தரமான இதழ்கள் என்று கருதக்கூடிய இதழ்களை இந்த உட்பிரிவின் கீழ் கொண்டு வரலாம். இந்தத்தன்மையில் மிகக் குறைவான இதழ்களே இருக்கின்றன.

நடுத்தரம்

பொழுதுபோக்கு நோக்கத்துடன் படித்துப் பார்த்து மகிழ்ச்சி அடையும் தன்மையில்தான் அனைவரும் இருக்கின்றனர். இந்தத் தன்மையில் தான் அதிகமான தமிழ் இணைய இதழ்கள் இருக்கின்றன. பார்பவர்கள் மற்றும் படிப்பவர்கள் மனதில் தீய எண்ணங்களை உருவாக்கும் தரம் குறைவான இதழ்களைத் தவிர்த்து, மற்றும் பொழுது போக்கிற்கும் உதவும் அனைத்து வகையிலான இதழ்களும் நடுத்தரமானது என்று வகைப்படுத்தலாம்.

தரமில்லாதவை

மனத்தில் தீய எண்ணங்களை உருவாக்கும் வழியில் படங்கள், கதை, கட்டுரை, செய்திகளை உள்ளடக்கங்களாக கொண்டு பார்ப்பவர்கள், படிப்பவர்களைத் தவறான வழிக்குக் கொண்டு செல்வதுண்டு. சமூகச் சீர்கேடுகளை உருவாக்கும்

தன்மையில் சில இணைய இதழ்கள் இணையத்தில் இடம் பெற்றிருக்கின்றன.

சிற்றிதழ்கள்

வணிக இதழ்களின் செயல்பாட்டில் பிடித்தமில்லாத நிலையிலும், ஒரு படைப்பாளன் தனது படைப்புகளைப் பத்திரிகைகளுக்கு அனுப்பி அவை வெளியிடப்படாமல் நிராகரிக்கப்படும் நிலையிலும் தனது கருத்துக்களை பற்று வழியில் வெளிப்படுத்த விரும்பியவர்கள் கொண்டு வந்ததுதான் பெரும்பான்மையான சிற்றிதழ்கள். இந்தச் சிற்றிதழ்களின் பெயர்கள் சற்று வித்தியாசமாக இருக்கும். சில சிற்றிதழ்களுக்கு ஓரெழுத்துத் தலைப்பாக அ, ஓ, ழ, என்று பெயரிடப்பட்டன. சில சிற்றிதழ்களுக்குச் சுண்டெலி, வெட்டிப்பயல், மாமியா என்று நகைச் சுவையாகப் பெயர்கள் வைக்கப்பட்டுள்ளன.. இலக்கிய வட்டம், கசடதபற, சதங்கை, சூறாவளி, போன்ற சிறப்பான பெயர்கள் சில சிற்றிதழ்களுக்கு வைக்கப்பட்டன.

குறுகிய வட்டத்துக்குள் குறைவான வாசகர்களைக் கொண்டு கையெழுத்துப் பிரதியாகவோ, குறைந்த அளவிலான அச்சுப்பிரதியாகவோ, சிற்றிதழ் வெளிக்கொண்டு வருபவரது கருத்துக்களையும் அவருடைய கருத்துக்களைச் சார்ந்துள்ள கருத்துக்களையும் அதிகமாகக் கொண்டு வெளியாகி வருவது ஒரு வரையறைக்குள் தான் இந்தச் சிற்றிதழ்கள் அச்சிலும், படைப்பிலும் தரம் சற்று குறைவாகத்தான் இருக்கின்றன.

பெரிய இதழ்களில் கிடைக்காத நல்ல மதிப்பு மிக்க படைப்புகள் மட்டுமே இடம்பெறக் கூடிய ஒரு சில சிறப்பான சிற்றிதழ்களும் உண்டு. இந்தச் சிற்றிதழ்கள் தரம் மிக்க படைப்புகளை வெளியிட்டு இலக்கியச் சூழலில் ஒரு புதிய மாற்றத்தைக் கொண்டு வந்தது. இதன் மூலம் சிற்றிதழ்களில் வெளியான பல படைப்புகள் மிகப்பெரும் பாராட்டுக்கும் விமர்சனத்துக்கும் கொண்டுவரப்பட்டன. சிற்றிதழ்களுக்காகத் தனியாக வாசகர்கள் உருவானதுடன் வாசகர் அமைப்புகளும் துவங்கப்பட்டன. சிற்றிதழ்களில் அதிகமான இதழ்கள்

வணிக நோக்கமின்றி வெளியிடப்படுவதாலும், தரமில்லாத இருப்பதாலும் பொருளாதாரப் பற்றாக்குறை காரணமாகத் தொடர்ந்து வெளியிட முடியாத நிலைக்குத் தள்ளப்படுகின்றன. இந்தச் சிற்றிதழ்கள் துவங்கப்பட்ட சில மாதங்களிலோ அல்லது சில ஆண்டுகளிலோ நிறுத்தப்பட்டு விடுகின்றன. சில இதழ்கள் மட்டும் தங்கள் வாழ்க்கையை நீடிக்கத் தொடர்ந்து போராடிக் கொண்டிருக்கின்றன.

"சிற்றிதழ் என்றாலே சிறந்த இதழ் என்று கூறுவது உண்டு. தற்போது சீரிதழ் என்றும் சொல்லி வருவது உண்டு. எனவே சிறந்த கருத்துக்களைச் சொல்லக்கூடிய எல்லா இதழ்களும் சிறந்த இதழ்கள் ஆகும். எதிர்காலத்தில் தமிழ்ச் சூழலில் ஒரு மாற்றம் ஏற்பட வேண்டுமானால் இது சிற்றிதழ்களால் மட்டுமே நிகழும்."6

## தமிழ் இணையச் சிற்றிதழ்கள்

அச்சில் வெளிவரும் தமிழ் சிற்றிதழ்களைப் போலவே இணையத்தில் வெளிவரும் பல தமிழ் இணைய இதழ்களும் உள்ளன. குறிப்பிட்ட எல்லைக்குள் குறைவான வாசகர்களைச் சென்றடையும் சிற்றிதழ்களைப் போல் இணைய இதழ்களுக்கான இணைய எல்லை விரிவாக இருந்தாலும் இணைய இதழ்களைப் படிக்க இணையம் பயன்படுத்தக்கூடிய திறன் இன்றியமையா தேவையாக உள்ளது. மேலும் இணையத்தைப் பயன்படுத்தும் பலருக்கும் தமிழில் இலக்கிய ஆர்வம் குறைவாக இருக்கிறது. தமிழ் இணைய இதழ்களுக்கான வாசகர்களின் எல்லை அகலமானதாக இருக்கிற நிலையிலும் வாசகர்களது எண்ணிக்கை மிக்க குறைவாகவே உள்ளன.

உலகில் புலம் பெயர்ந்த தமிழர்கள் தமிழின் மேல் கொண்ட ஆர்வத்தாலும், தமிழனின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் எண்ணத்திலும் தோற்றுவித்த தமிழ் இணைய இதழ்கள் அதிகமாக இருக்கின்றன. இவைகளுக்கான வாசகர்கள் எண்ணிக்கையும் மிக்க குறைவாகவே இருக்கின்றன. இந்தத்தமிழ் இணைய இதழ்களைச் சிற்றிதழ்களாகவே கருத வேண்டியிருக்கிறது.

அச்சு இதழ்கள் வளரும் எழுத்தாளர்கள் நெருங்க இயலாத அளவிலேயே உள்ளன. இணைய இதழ்கள் புதிய எழுத்தாளர்களுக்கு மேடை அமைத்துக் கொடுப்பதுடன் அவர்களை வார்த்தெடுக்கும் பயிற்சி களங்களாகவும் அமைகின்றன. அந்த விதத்தில் இணைய இதழ்கள் இளைய சமுதாயத்தில் தமிழார்வத்தைத் தூண்டும் அணையாமல் பாதுகாக்கும் அரிய பணிகளைச் செய்கின்றன. இணைய இதழ்கள் சிற்றிதழ்களைப் போல் உள்ளன.

அதிக வாசகர்களைக் கொண்டு அச்சுப் பிரதியாக வெளியாகும் பல நாளிதழ்கள், வாரம், மாத இதழ்களில் பல இணைய இதழ்களாகவும் வெளியாகிக்

கொண்டிருக்கின்றன. இவை அச்சுப் பிரதியில் உள்ள படைப்புகளை அப்படியே இணையத்தில் வெளியிட்டு வருவதால் இவற்றை இணையச் சிற்றிதழ்களின் கீழ் கொண்டு வர இயலாது.

இணையத்தில் மட்டுமே வெளியாகும் அனைத்து தமிழ் இணைய இதழ்களையும் தமிழில் வெளியாகும் வலைப்பூக்களையும் தமிழ் இணையச் சிற்றிதழ்கள் என்கிற ஒரு வரையறைக்குள் கொண்டு வரலாம்.

இணைய இதழ் குழுமம்

உலகத் தமிழர்களின் கலை, இலக்கியம், வணிகம், தொழில், உள்ளிட்ட அனைத்துத் தகவல்களையும் இணைய தளத்தில் சேமிக்க வேண்டும் என்று கருதியது. இதன் இயக்குநர் சா.அ.சௌரிராசன் இதற்கு முன்முயற்சி எடுத்தார். அதன் ஒரு பகுதியாகத் தமிழ்நாட்டில் வெளிவரும் தமிழ் இதழ்கள் சிலவற்றை வலையேற்றம் செய்தார்.

விண்ணோசையைத் தொடர்ந்து ஒளியோவியம், வானவில், பனித்துளி, முல்லை, நூலகம், சுவடி, இலக்கியச் சாளரம், கவின், சென்னை சுவர்கள் ஆகிய இணைய இதழ்களைத் தொடங்கினார் அதற்கு ஆசிரியாராகவும் இருந்தார். ஊழியராய் இருந்த ப.திருநாவுக்கரசு இம்முயற்சிக்குத் துணைநின்றதோடு பல இதழ்களுக்குப் பொறுப்பாசிரியராகவும் இருந்தார்.

இதழ் தொடங்கியதோடு அச்சிதழ்கள் பலவற்றையும் இணைய தளத்தில் ஏற்றினார். அன்பு வணக்கம், மூலிகை மணி, தமிழ் கம்ப்பூட்டர், வளர்தொழில், நவீன வேளாண்மை, மியூசிக் வேல்டு, சங்கீத சரிகமபதநி, மருத்துவ அறிவியல் மலர், ஏற்றுமதி உலகம், துளிர், புதிய கல்வி, பூவுலகு, ஆகிய அச்சிதழ்கள் வலைப்பதிப்பு மலர்ந்தன.

இணைய இதழ்கள்

- தினபூமி.காம்
- தமிழ்சினிமா.காம்
- கணியன்.காம்
- ஆறாம்திணை.காம்
- வெப்உலகம்.காம்
- தட்ஸ்தமிழ்.காம்
- பதிவுகள்.காம்

தினபூமி.காம்

"இணையத்தில் நுழைந்த தமிழின் முதல் நாழிதழ் என்ற பெருமைக்குரியது."7 அன்றாட செய்திகள், இலவச இணைப்புகள், சினிமா செய்திகள், மீடியா, புகைப்படங்கள், ஜோதிடம், ஆகியவை எல்லாம் உள்ளடக்கமாக உள்ளன.

இலவச இணைப்புகளில் ஞாயிறு பூமியும், மாணவர் பூமியும், சனியன்று வலையேற்றம் பெறுகின்றன. மருத்துவ பூமி திங்களன்றும், மங்கையர் பூமி செவ்வாய் அன்றும், டி.வி. பூமி புதன் அன்றும், கதை பூமி வியாழன் அன்றும், ஆன்மீக பூமி வெள்ளியன்றும் ஆகியவை வலையேறுகின்றன.

தமிழ் சினிமா.காம்

இவ்விதழ் தரும் செய்திகளை ஈழச் செய்திகள், தினசரிச் செய்திகள், அன்றாடத் திரையுலகச் செய்திகள் என மூன்று வகைகளாய்ப் பிரிக்கலாம். அனைத்தும் தினந்தோறும் புதுப்பிக்கப்படுகின்றன.

பெயரில் தமிழ்சினிமா என இருந்தாலும் தமிழ் சினிமா பற்றிய செய்திகள் 60 விழுக்காடுதான் உள்ளன. தமிழ், தமிழர் நலன் பற்றி 40 விழுக்காடு செய்திகள் உள்ளன.

தமிழ் இணைய இதழ்களில் முதன்முதலாக அதிக விளம்பரம் செய்தது தமிழ்சினிமா.காம் ஆகும். இதயம் பேசுகிறது என்ற அச்சிதழில் தொடர்ந்து 38 வாரங்கள் முழுப்பக்க விளம்பரம் கொடுத்தது.

சன் தொலைக்காட்சியில் 20 முறை விளம்பரம் செய்தது. தமிழ்சினிமா.காம் பாருங்கள் எனத் தமிழ்நாடு முழுக்கப் பத்தாயிரம் அழைப்பிதல் ஒட்டிகள் விநியோகிக்கப்பட்டன. டி.கியூ.வீக் தமிழ் கணினி, கணினிஉலகம், இணைய உலகம், ஆகிய இதழ்களில் இரண்டு ஆண்டுக்கு விளம்பரங்கள் வெளிவந்தன.

ஆண்டோ பீட்டர் தானாகவே 'அமுதம்' என்ற எழுத்துருவை உருவாக்கித் தன் இதழில் பயன்படுத்தினார். 1999 இல் நடந்த இணையத் தமிழ் மாநாட்;டுகுப் பிறகு 1999 அக்டோபர் 2 முதல் 2000 என,

எழுத்துருவின் பெயர் மாறியது. இந்த எழுத்துரு உலகெங்கும் 18 லட்சம் பேரிடம் உள்ளது. 178 இணைய தளங்களில் பயன்படுகிறது.

கணியன்.காம்

கணியன்.காம் இப்போது வெளிவரவில்லை. இந்த இதழைக் குறித்து ப.திருநாவுக்கரசு குறிப்பிட்டுள்ளார். கணியன்.காம் என்னும் கணியன் வலையம் 1997 ஆம் ஆண்டு ஏப்பரல் 14 தேதி நா.கோவிந்தசாமி அவர்களால் தொடங்கப்பட்டது. கணியன் தமிழகச் செய்திகளைத் தொகுத்து கணியன் தமிழ் செய்தி என்ற பெயரில் கொடுத்து வந்தார். இத்துடன் பிரபல பிரமுகர்களின் பேட்டிகள், சினிமா தகவல்கள், சிறப்புத் தொகுப்புகள் எனக்கணியன் வளர்ந்தது.

இந்திய சுதந்திர பொன்விழாவைக் குறிக்கும் வகையில் இந்தியா 50:50 என்ற சிறப்புத் தொகுப்பு ‘மாணவன்’ என்ற மாணவர்களுக்கான இதழ் நாடகன் இதழில் நாடக எழுத்தாளர்களின் படைப்புகள் விமர்சனங்கள் போன்றவை வெளிவந்தன. ந.முத்துசாமி, கா.சிவத்தம்பி, சிதம்பரநாதன், மௌன குரு போன்ற நாடக வல்லுநர்களின் பேட்டிகளும் சில நாடகங்களின் சிறு பகுதிகளும் இடம்பெற்றன.

1998 ஆம் ஆண்டு கணியனில் தமிழ் இணைய நாழிதழ் தொடங்கப்பட்டது. இவ்விதழுக்கான செய்திகளைச் சென்னையிலிருந்து செ.ச.செந்தில்நாதன், சி.அண்ணாமலை ஆகியோர் அனுப்பி வந்தனர்.

ஆறாம் திணை

செய்திகள், கவிதை, சிறுகதை, குழந்தை இலக்கியம், புதுவரவு, விடுகதை, பழமொழி, தமிழ் அறிவோம், சொல்லாட்டம், கைப்பக்குவம், வெண்பா மேடை, சென்னை சுவடுகள், திட்டிவாசல், குறுந்தொடர், சிற்றிதழ் பக்கம், நிகழ்வுகள், தலையங்கம், எண்ணங்கள் போன்ற பகுதிகள் இதில் காணப்படுகின்றன. இது செய்திகளைச் சிறப்புப் பார்வையோடும் வெளியிடுகிறது. சினிமா

சினிமா, சமயம், நேர்காணல், மக்கள் தெய்வங்கள் என மேலும் பல பகுதிகள் இதில் உண்டு.

ஒவ்வொரு பகுதியும் வாரத்தின் ஒவ்வொரு நாளில் தொடர்ந்து வெளிவருவது குறிப்பிடத்தக்கது. நேர்காணல் புதுவரவு ஆகியவை ஞாயிறு தோறும் வெளிவருகின்றன. விடுகதைப் பகுதி, திங்கள் கிழமைகளிலும் அரை நூற்றாண்டுக்கு முந்தைய சென்னை நகரின் தோற்றம் பற்றி அசோகமித்திரன் எழுதும் பகுதி செவ்வாய் தோறும் வந்தன.

நாட்டுப்புறத் தெய்வங்கள், கைப்பக்குவம், கவிதை ஆகியவை புதன் தோறும் வந்தன. சிற்றிதழ் அறிமுகம் பழமொழி, ஆகியவை வியாழன் வெளிவந்தன.

பொங்கள் மலர், தமிழ்ப்புத்தாண்டு மலர், சுதந்திர தினச் சிறப்பிதழ், தீபாவளி மலர், எனப் பண்டிகை தோறும் சிறப்பு மலர்களை இது வெளியிட்டுள்ளது.

வெப் உலகம்.காம்

14.01.2000 அன்று தொடங்கிய வெப் உலகம், உலகின் முதல் இந்தி போர்ட்டலைத் துவக்கிய வெப்துனியா.காம் ஆகும். அடுத்த கட்டமாகத் தமிழில் வெப் உலகம்.காம் துவக்கியுள்ளது.

ஒவ்வொரு மொழிக்கும் தனிச்சுவையும் அழகும் உண்டு. நீண்ட வரலாறும் உயர்ந்த பாரம்பரியமும் கொண்ட இந்திய மொழிகளின் தனித்தன்மை ஆகும். இணையத்தில் தொழில் நுட்பத்தையும் பெருகிவரும் வாய்ப்புகளையும் உலகின் ஏனைய மக்கள் பெற்றுப் பயனடைவதைப்போலத் தமிழர்களும் பயன்பெற வேண்டும் என்பதே நோக்கமாகும்.

வெப் உலகம்.காம்

செய்திகளோடு மனிதவாழ்வின் அனைத்து அம்சங்களுக்கும் உரிய முக்கியத்துவம் அளிக்கப்போகும் தமிழ் போர்ட்டலாக இருக்கும் வெப்உலகம்.காம் வாயிலாக இணைய உலகின் அணைத்துத் தளங்களோடும் தமிழ் ஆங்கிலம், ஆகிய இரு மொழிகளிலும் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். உடனுக்குடன் உங்கள்

உணர்வுகளைப் பரிமாறிக் கொள்ளவும் வாய்ப்பு உண்டு.

இந்தியாவில் மட்டுமன்றி உலகெங்கிலும் வாழும் கோடானகோடி தமிழ் மக்களின் ரசனைக்கேற்ப அனைத்து தகவல்களையும் ஆழமான எளிய தமிழில் வெப்உலகம் அறிந்து வருகின்றன.

“வெப்துனியா.காம் நிறுவனத்தின் தலைமை அதிகாரியான வினேஸ் சஜ்லானி, இணையத்தில் ஏற்பட்டுவரும் வேகமான முன்னேற்றங்களை இந்தியா அலட்சியப் படுத்திவிடமுடியாது. இந்தியாவின் சமூக பொருளாதர அரசியல் வாழ்வின் வேர் மாநில மொழிகள்தான் அவற்றின் வழியாக மட்டுமே இணைய புரட்சியை இந்தியாவில் ஏற்படுத்த முடியும் அதற்கான ஆரம்பமே வெப்துனியா.காம் என்று கூறுகிறார்”8. மின் அஞ்சலைப் பயன்படுத்து வோருக்கு ஈத்ரா.காம் மூலமாக புதிய வசதியை வெப்உலகம்.காம் வழங்குகிறது. அனுப்ப விரும்புவதைத் தமிழிலோ அல்லது ஆங்கிலத்திலோ பேச்சு வழக்கின்படி பதிவு செய்தால் உரியவர்களுக்கு விரும்பும் மொழியில் அஞ்சல் சென்று சேர்ந்துவிடும். இதற்கு அந்த மொழியின் விசைப்பலகை இயக்கத் தெரிந்திருக்க வேண்டிய அவசியமில்லை. நமது மின் அஞ்சலைப் பெறுபவரும் எவ்வித அச்சுக் குறியீட்டுப் பிரச்சனையுமின்றி செய்தியைப் பெறலாம்.

ஈவார்த்தா என்ற பெயரில் ஆங்கிலம், குஜராத்தி, மராத்தி, இந்தி, பஞ்சாபி, மலையாளம், எனப்பல மொழிகளில் கலந்துறையாடல் வசதியையும் வெப்உலகம் இதழ் வழங்கியுள்ளது. தமிழ் தவிர, இந்தி, தெலுங்கு, மலையாளம், ஆகிய மொழிகளிலும், இவ்விதழ் வெளிவருகிறது.

தட்ஸ்தமிழ்.காம்

இந்தியா இன்ஃபோ.காம் வரையறுத்தது என்ற நிறுவனம் 1993 முதல் ஆங்கிலத்தில் இணையவழிச் செய்திச் சேவை ஆற்றிவருகிறது. அத்துடன் மின்னஞ்சல், அரட்டை, மின் வணிகம் ஆகிய சேவைகளோடு வேலைவாய்ப்புத் தகவல்களுக்காக கேரியா இந்தியா.காம்

கிரிக்கெட்டுக்காக தட்ஸ்கிரிக்கெட் காம், பொது அறிவுக்காக குவிஸ்பிரெயன்.காம், பெண்களுக்காக ஈவ்ஸ்இந்தியா.காம் ஆகியவற்றை ஆங்கிலத்தில் நடத்திவருகிறது.

இந்திய மொழிகளுக்காகத் திராவிட மொழிகள் நான்கிலும் இணைய இதழ்களை நடத்துகிறது. பிப்ரவரி 2000 த்தில் தமிழிலும் 5.4.2000 அன்று கன்னடத்திலும் ஏப்ரல் 2000 - த்தில் மலையாளத்திலும் இதே ஆண்டில் தெலுங்கிலும் இதழ்களைத் தொடங்கியது.

தமிழ் இணைய இதழுக்கு முதலில் **http;// tamil.indiainfo.com** என்ற முகவரியே இருந்தது. இது பின்னர் தட்ஸ் தமிழ்.காம் எனப் பெயர் மாற்றம் பெற்றது. பெங்களூளரில் இதன் தலைமை நிலையம் உள்ளது. இந்தியா இன்ஃபோ.காம், ஐ.எஸ்.ஓ – 9001 தரச்சான்றிதழ் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

பதிவுகள்.காம்

கனடாவிலிருந்து வெளிவரும் இவ்விதழின் ஆசிரியர் வ.ந.கிரிதரன் இணையத் தமிழை வளர்ப்பது, பதிவுகளின் நோக்கங்களுள் ஒன்று ஆகும். வாசகர் கடிதங்கள், மின்னஞ்சல் மூலம் மட்டுமே ஏற்கப்படும். தபால் மூலம் வரும் ஆக்கங்கள் ஏற்றுக் கொள்ளப் படமாட்டாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். அனுப்புவோரின் மின்னஞ்சல் முகவரி பிழையாக இருந்தால் ஏற்கப்படாது என்பதை அறியத் தருகின்றோம் என அறிவித்துள்ளனர்.

தளவடிவமைப்பு சிறப்புற அமைந்துள்ளது எனவே படைப்புத்திறன் முதலிய சிறப்புக்காக 2002 - 2003 ஆம் ஆண்டுக்கான கோல்டன் வெப் விருதை பெற்றுள்ளது. மேஜனின் வெப் செலக்ட் விருது கனடா கிராமக்ஸ் வழங்கிய சிறந்த வடிவமைப்புக்கான கோல்டு விருது 2003 கனடியன் வெப் விருது 2003 ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளது.

கனடாவிலிருந்து வலையேறும் இவ்விதலழில் இசை, அரசியல், கவிதை, சிறுகதை, நூல் விமர்சனம்,

நிகழ்வுகள், அறிவியல், கணினி உலகம், சினிமா, வாசகர் எதிரொலி, நாடகம், வரி விளம்பரம், வர்த்தகம், விவாதம், ஆகிய பகுதிகள் உள்ளன.

கலைச் சொற்கள்

தமிழ்ச் சொல் ஆங்கிலச் சொல்
இணையம் Internet
இணைய ஆவணகம் Internet Arichive
உலாவு Broswer
எண்ணிம நூலகம் Digital Library
எண்ணிம உள்ளடக்கம் Digital Content
ஒலிக் காதணி Headphon
ஒலி புத்தகம் Audio Book
ஓப்பன் ஸோர்ஸ் (இயங்கு செயலி) Operating System
காட்சியளிப்பு கோப்பு Presentation File
காட்சி வழி Video Text
தகவல் மீட்டெடுப்பு ஒருங்கியம் Information Refrivel System
தரவு Data
தரவுக் கவர்வு Data Capture
தரவுப் பதிவு Data Entry
தரவுப் படிவம் Data Format
தரவுத் திரட்டு Data Gathering
தரவு நூல்கள் Data Librain
தரவு பதிதல் Data Logging
தொலை வரி Tell - Text
பதிவிறக்கம் Downlod
மின்னூல் மாற்றி Primo Pdf
மின்னூல் படிப்பான் Adobe Reader
மின் புத்தகங்கள் E - Books
மின்னேற்ற Recharging
மின் நூலகம் Electronic Library
மின்னணு அறிக்கைப் பலகை Electronic Black Board
மின் வணிகம் Electronic Commerce
மின்னணு உள்ளடக்கம் Electronic Content
மின்னணு தரவு மாற்றி Electronic Data Change

மின்னணு கருவி Electronic Device
மின்னணு வரைப்படம் Electronic  Diagram
மின்னணு அகராதி Electronic Dictionary
மின்னணுப் படிவம் Electronic Form
மின் இதழ் Electronic Journal
மின்னஞ்சல் Electronic Mail
மின் செய்தி விடுப்பு Electronic Message
மின்னிசை Electronic Music
மின் அலுவலகம் Electronic Office
மின்னச்சுப் பொறி Electronic Printer
மின்னங்காடி Electronic Shopping
மின் பதிப்பு Electronic Publishing
மின்னலை Electronic Wave
மின்உணர் தாள் Electronic Sensitive Paper
மீயுரை குறியீட்டு மொழி Hyper Text Markup Language
வாசக பேச்சு Text To Speech
வருடல் Scan

## தொகுப்புரை

இணையப் பரப்பில் முக்கியமாகக் கருதப்படுவது இணைய இதழ்கள் ஆகும். இணையத்தில் மட்டுமே இடம் பெறும் இதழ்களை இணைய இதழ்கள் என்று குறிப்பிடுவது உண்டு.

இணையத்தில் பொதுவான செய்திகளையும், பொழுது போக்குகளையும், பரப்பும் இதழியல் பணியை இணையம் எனும் ஊடகத்தின் வழி நிகழ்த்தப்படுவது இணைய இதழியல் என்கிறோம்.

இணையத்தில் நுழைந்த முதல் இந்திய மொழி என்ற பெருமை தமிழுக்கு உண்டு.

தமிழில் வெளியான முதல் இணைய இதழாக ‘அ’ என்பதனையே கருதப்படுகின்றன.

தமிழில் வெளிவந்த முதல் குழும இதழ் ‘கணியன்.காம்’ ஆகும்.

அதிக வாசகர்களைக் கொண்டு அச்சுப் பிரதியாக வெளியாகும் பல நாளிதழ்கள், வாரஇதழ்கள், மாதஇதழ்கள், என பல இதழ்களும் இணையத்தில் வெளியாகிக் கொண்டு வருகின்றன.

இன்றைய காலகட்டத்தில் அன்றாடமாக பயன்படுத்திவரும் நாளிதழ்கள் அனைத்தும் இணையத்தில் ஏறி இணையவழியாகவும், பிரதி வழியாகவும், வெளியாகி கொண்டு வருகின்றன.

இதழ்கள் நாளுக்கு நாள் புதிது புதிதாக பிரதியைவிட இணையத்தில் வளம்வந்து கொண்டு இருக்கிறது.

இணையம் என்ற ஓர் இணைப்பு உலகம் முழுவதும் உலா வரும் உலாவியாக இருக்கிறது. நாம் விரும்பிய அல்லது தேவையான தகவல்களைச் சொடிக்கியவுடன் வெளிகொணரவும் நம் படைப்புகளாகி நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றை பதிவு செய்யவும் பல தகவல்களைப் பரப்புவதற்க்கும் பரிமாறுவதற்கும் பயன்படுவது இணையம் ஆகும்.

இணையத்தைத் தனிமனிதனோ அல்லது குழுவோ கட்டுப்படுத்துவதில்லை. எனினும் இணையத்தினை வழிநடத்த இணையக் கழகம் என்ற ஒன்றை நிறுவி வல்லுநர்கள் நடத்தி வருகின்றனர்.

இணைய தளங்களைத் தொடங்கவதற்கு முகவரியைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். வலைப் பக்கங்களை உருவாக்க வேண்டும். விரும்புவோர் அணுகும்போது பரிமாற ‘சர்வர்’ செலுத்த வேண்டும். இப்படி எல்லா நிலைகளிலும் பணம் தேவையாகிறது.

வலைப்பூவில் இந்தச் சிக்கல்கள் இல்லை இது முற்றிலும் இலவசம். நீங்கள் உங்கள் பெயரில் இலவச மின்னஞ்சலை உருவாக்கிக்கொள்வதைப் போல உங்களுக்கென வலைப்பூவை உருவாக்கிக் கொள்ளலாம். வலைப்பூவின் வரைவிலக் கணங்களில் ஒன்று அது தனிமனித இணையதளம் ஆகும்.

மின்னூல்கள் இன்றைய தொழில் நுட்ப உலகில் மிகவும் புகழ்;பெற்று மறுவெளியீடு செய்து வருகின்றது. நாம் அன்றாடம் பயன்படுத்தும் புத்தகங்களில் இருந்து மாறுபட்டு மின் புத்தக பயன்பாட்டுக்கு மாறி வருகிறார்கள்.

இணைய வசதியைப் பெற்று ஓர் ஆய்வுக்குத் தேவையான தகவல்களையும், மின் புத்தகங்களையும், மின் இதழ்களையும், இணையத்தில் பெறும் அளவிற்கு வசதிகள் கொண்டு உருவாக்கிவிட்டானர்.

தமிழ் மொழியில் இன்று பரவலாக இருக்கும் நூல்களையும், அச்சிடப்படும் நூல்கள் அனைத்தும்

மின்னூலாக மாற்றி வருவதுண்டு;

தமிழிழ் ஆய்வு செய்யும் ஆராய்ச்சியாளர்களில் சிலர் சில குழுக்களாகச் சேர்ந்து தன் ஆய்வேடுகளை மின்னூலாக உருவாக்குவது உண்டு. (மதுரை திட்டம்)

மின்னூல்களை ஒரு கட்டமைப்பாக வைப்பதற்கு மின்நூலகங்கள் உருவாக்கினர். அந்நூலகத்தின் மூலமாக பல மின்னூலை வெளியிட்டு வருகின்றனர். அவ்வாறு வெளியிடப்படும் நூல்கள் கணினியில் காட்சியாகவும், ஒலி, ஒளியாகவும் படிப்பது போல வடிவமைத்து இருக்கின்நனர். இந்த அமைப்பை திறன்பேசியிலும், நுண்ணரிபேசிலும், வில்லை பேசியிலும் பயன்படுத்தும் விதத்திலும் நூல்களை வடிவமைத்திருக்கிறது.

இணையப்பரப்பில் முக்கியமாகக் கருதப்படுவது இணைய இதழ்கள் ஆகும். இணையத்தில் மட்டுமே இடம் பெறும் இதழ்களை இணைய இதழ்கள் என்று குறிப்பிடுவது உண்டு. பொதுவாக செய்திகளையும், பொழுது போக்குகளையும், பரப்பும் இதழியல் பணியை இணையம் எனும் ஊடகத்தின் வழி நிகழ்த்தப்படுவது இணைய இதழியல் என்கிறோம்.

அதிக வாசகர்களைக் கொண்ட அச்சுப் பிரதியாக வெளியாகும் பல நாளிதழ்கள், வாரஇதழ்கள், மாத இதழ்கள் எனப்பல இதழ்களும் இணையத்தில் வெளியாகிக் கொண்டு வருகின்றன.

இன்றைய காலகட்டத்தில் அன்றாட பயன் படுத்திவரும் நாளிதழ்கள் அனைத்தும் இணையத்தில் ஏறி இணையவழியாகவும் பிரதி வழியாகவும் வெளியாகிக் கொண்டு வருகின்றன.

இணைய இதழ்கள் பலவற்றில் அவற்றைப் பற்றிய எந்த விவரமும் இல்லை. ஆசிரியர் பெயர், முகவரி, நடத்துபவர், ஆசிரியர் குழுவினர், தொடங்கிய ஆண்டு உள்ளிட்ட அடிப்படைத் தகவல்களை ஒவ்வோர் இதழும் அவசியம் குறிப்பிடவேண்டும்.

அச்சிதழுக்கான குறைந்தபட்ச விதிகளும், நெறிமுறைகளும் உள்ளன. கூட்டங்களும்

கட்டுப்பாடுகளும் உள்ளன. ஆனால் இணைய இதழுக்கானத் தனிச்சட்டங்கள் இன்னும் ஏற்படுத்தப் பெறவில்லை.

அச்சிதழ்களின் வாசகர்கள் எண்ணிகை 90 விழுக்காடு என்றால் இணைய இதழ்களின் வாசகர்கள் எண்ணிக்கை 85 விழுக்காடு வாசிக்கும் தன்மை கொண்டுள்ளன.

இன்றைய காலக்கட்டத்தில் அச்சில் வெளியிடும் நூல்களைவிட இணையத்தில் வெளியாகும் நூல்கள் அதிகமாகும். அவை, மின் நூல்களாகவும், மின் இதழ்களாகவும், வெளியாகின்றன். இந்நூல்களைப் படிப்பதற்கு மென்பொருள்களும், வன்பொருள்களும் உருவாக்கப்பட்டுள்ளன. இம்முறை பயன்படுத்துவதால் எந்த வித அழிவுகளும் ஏற்படுவதில்லை. மின்னணுச் சாதனங்கள் மூலமாகப் பல நூல்களையும், தரவுகளையும் ஆவணப்படுத்துவதில் முக்கிய பங்கு கொண்டவை ஆகும்.

இனி வரும் காலங்களில் அச்சுவழிச் சாதனங்களைத் தவிர்த்து விட்டு மின் சாதனங்கள், மற்றும் மின்னணுச் சாதனங்களை பயன்படுத்தும் முறைக்கு மாறிவிடுவார்கள்

குறிப்புகள் **1**


1. http;//ta.wikipedia.org/s/ma7
2. http;//tech.neechalkaran.com
3. http;//www.tamilheritange.org/old/index.html
4. http;//www.muthalvan.in
5. http;//ta.wikipedia.org/s/w97
6. http;//ta.wikipedia.org/s/a4p
7. க.துரையரசன் - இணையமும் இனிய தமிழும் - 60 ப


குறிப்புகள் **- 2**


1. இராம கணககசுப்புரத்தினம் - திருக்குறள் உணர்வுரை - 144 ப
2. க.துரையரசன் - இணையமும் இனிய தமிழும் - 15ப
3. க.துரையரசன் - இணையமும் இனிய தமிழும் - 15ப
4. அண்ணா கண்ணன் - தமிழில் இணைய இதழ்கள் - 1
5. ப தமிழண்ணல் - தொல்காப்பியம் - 553ப


குறிப்புகள் **- 3**


1. http;//www.pathivukal.com
2. http;//www.pathivukal.com
3. http;//www.pathivukal.com
4. தமிழில் இணைய இதழ்கள் (23 - ப)
5. தமிழில் இணைய இதழ்கள் (25 - ப)
6. http;//ta.wikipedia.org/s/rgn
7. http;//www.thinaboomi.com

8. தமிழில் இணைய இதழ்கள் (34 - ப)

துணைநுல்பட்டியல்

அண்ணா கண்ணன் 2003 - தமிழில் இணைய இதழ்கள் அமுதசுரபி, எ.7 இரண்டாம் அவென்யு அண்ணாநகர் கிழக்கு சென்னை 600102

இராதா செல்லப்பன் 2012 - கணினிக் கலைச்சொற்கள் நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிலிட் 41–பி சிட்கோ, இண்டஸ்டிரியல் எஸ்டேட் அம்பத்தூர் சென்னை 600098

இராம.கனகசுப்புரத்தினம் 2009 - திருக்குறள் உணர்வுரை 118 மனோஜ் நகர் சாந்தி கியர்ஸ் பவுண்டதி கண்ணம்பாலையம், கோவை

கனகராாசு.க 2015 - தமிழியல் ஆய்வுப்போக்குகள்

தமிழண்ணல் 2014 - தொல்காப்பியம் மூலமும்கருத்துரையும் மீனாட்சி புத்தக நிலையம் மயூராவளாகம் 48 முதல் தெரு மதுரை

துரையரசன்.க 2014 - இணையமும் இனிய தமிழும் இசைபதிப்பகம் 24 சபரி நகர் டாக்டர் மூர்த்தி சாலை கும்பகோணம் 612001

மணிகண்டன்.துரை 2012 - தமிழ்க்கணினி-இணையப் பயன்பாடுகள் கமலினி பதிப்பகம் கச்சமங்கலம் அஞ்சல் தோகூர் வழி தஞ்சாவூர்

மணிகண்டன்.துரை 2014 - தமிழ்க்கணினி இணையப் பயன்பாடுகள்

கண்ணன்.மு கிழக்கு பதிப்பகம்

அன்பானந்தன் .பொ தொகுதி ஐ – 2014

திருச்சிராப்பள்ளி

மணிகண்டன்.துரை 2014 - தமிழ்க்கணினி இணையப் பயன்பாடுகள்

கண்ணன்.மு கிழக்கு பதிப்பகம்

அன்பானந்தன் .பொ தொகுதி 2 – 2014

திருச்சிராப்பள்ளி

